# "THE LESSONS OF THE WAR GO DEEPER......THEY REACH THE SPIRIT OF MAN."

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." • "TO THINE OWN SELF BE TRUE."





அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

"**New Series**" ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** "**Approved**"

புத்தகம். **24.**] ௩௯ ஆவணிமீ, **1916**௵ ஆகஸ்டுமீ [சஞ்சிகை **5.**


## THIRD YEAR OF THE GREAT WAR.

On Friday the 4th instant the great war entered on its third year. The following message from the Secretary of State for India sums up the past phases and the present position of the war. "The situation at the close of the second year of the war may be summarised thus:—Germany had hoped to crush France in the first year but France recovered from the initial shock. Germany then hoped to strike Russia to ground last year but despite all German successes the Russian army remained intact. Germany returned to France and struck at Verdun which is still unconquered. Germany has unbroken armies and some reserves in her depots. She says she has no fear of famine. Financially, she has still the confidence of her people and neutrals have not yet gone against her but enthusiasm engendered by the first successes has disappeared. Public opinion in Germany has distinctly changed, and now shows signs of fatigue. The hope that she can crush her enemies in detail by well directed blows, has vanished, and the people are beginning to think about the future. The German financial system is very fragile and if Germany cannot end the war quickly to her advantage she will pass through a terrible period of economic difficulties. After calling up her trained men Germany called up various categories of untrained men beginning with the youngest. The 1916 and 1917 classes have already been summoned and only inferior materials is left. Men up to 46 years have also been called up. In depots are 150,000 to 200,000 wounded who have recovered and the 1918 class. But once these resources are exhausted there remain only old men and convalescents. Yet Germany has to maintain war on all the fronts and support her allies in widely extended fields of operations. She has not yet suffered a crisis owing to lack of effectives but a crisis is approaching and though she has still great resources of labour and is

employing prisoners of war aud inhabitants of invaded countries, she is dependent on her own activities and cannot draw on neutral countries as the Allies can. The blockade has not brought actual starvation but it must be pressing hard on the Germans or they would not show such rage at its continuation. Austria is in even a worse position than Germany. She has called up men of 52 and already enrolled the 1918 class. Turkey cannot give the help expected of her or improvise a modern army. On the other hand neither Russia, Italy nor Great Britain have yet been able to employ all their resources. Germany at the beginning had superiority in the quality of munitions but this has been rapidly diminishing. Germany has had many victories but the Allies are now stronger than they ever have been and their resources in men and material ore now greater than the resources of Germany." This dispassionate review of the situation, encourages the hope that the issue of the war will have been decided before, perhaps, many months before, the next 4th of August comes round, in favour of the Allies. This is our earnest hope and prayer. No impartial and honest person who examines the question can help coming to the conclusion that as between the two sets of belligerents, the British and their Allies have reason, humanity and righteousness on their side. And it is, therefore, the duty of all who care for these things to wish victory to them The triumph of Germany would be the triumph of brute force. And nobody, not even the Germans in their sober moments, would like brute force to triumph over right and justice.

At the same time, we trust that Great Britain, Russia, France, Belgium and Italy will not fail to understand the deeper significance of this war. If we believe in an over-ruling Providence whose will is expressed by the moral law, we cannot escape the conclusion that the terrible losses of men and wealth, the immeasurable grief and suffering of millions of men, women aud children, which this war has entailed on them as well as on the enemy, are intended as a warning to them no less than to Germany. They have not set up, it is true, brute-force as an idol to be worshipped as Germauy has done, but can they look into their hearts and say that, in their relations with the coloured races, they have consistently given effect to those laws of humanity and equity the violation of which by Germany in relation to them, they so much and so justly reprobate? During the Franco-German War of 1870, Bismark, referring to rhe allegations of atrocities by the German army, retorted with a *tu quoque.* We do not wish to rake up unpleasant memories, but this we feel and must say most emphatically, that God makes no distinction between his white and his coloured children, and unless the white races learn to act towards the coloured races on the same principles as those by which they whish to see their relations with one another regulated, there will be no permanent peace or prosperity for them. And we, too, the coloured races have a terrible responsibility for all this mass of blood and tears that the world has shed and is shedding on account of this war. By our weakness, our discord and disunion, we have temp'ed the white races from the path of righteousness, and for that too, there must be repentance and atonement. There is need for all of us, therefore, to humble ourselves, and to seek prayerfully to do the Divine Will, so far as a knowledge of it is vouchsafed to us, sincerely and reverently. The lessons of the war go deeper than military or economic organization. They reach the spirit of man.—*The Indian Social Reformer.*

THEFT IN MYLAPORE.—On Friday night (the 4th instant), the house of Mr. C. V. Swaminatha Iyer, in premises No. 19, Adam Street, Mylapore, was entered into, and the three locked rooms being forced open, jewels, silver vessels and other household properties to the aggregate value of about Rs. 1,000 and odd, with cash in gold, currency notes and change, to the value of about Rs. 70 were stolen. A reward has been offered to any person giving information leading to the arrest of the culprits and recovery of the property stolen.

## SCHOOL FINAL BOARD

His Excellency the Governor in Council is pleased to appoint the following gentlemen to be members of the Board for the award of Secondary School-leaving Certificates for a period of three years from the 15th July, 1916:

### OFFICIALS

Mr. Mark Hunter, Professor of English, Presidency College

Mr R. G. Grieve, Deputy Director of Public Instruction.

Mr. E. W. Green, Acting Inspector of Schools, Eighth Circle

Mr. Rao Bahadur V. R. Venkatarama Aiyar, Inspector of Schools, Second Circle.

Mr. P. V. Seshu Aiyar, Professor of Mathematical Physics in the Presidency College.

### NON-OFFICIALS

The Rev. W. Skinner, Principal of the Madras Christian College.

The Rev. A. Moffat, Professor of Physical Science in the Madras Christian College.

Mr. R. Venkataratnam, Principal of the Raja's College, Pittapur.

Mr. K Seshu Aiyar, Headmaster of the Municipal High School, Mayavaram.

The Rev. J. X. Miller, Principal of the American Mission High School, Pasumalai.

புஸ்தகம்-24.] [சஞ்சிகை-5.
"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

நள ஞு ஆவணிமீ } விவேக



சிந்தாமணி { August-Sep 1916.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## "THE LESSONS OF THE WAR GO DEEPER.........THEY REACH THE SPIRIT OF MAN."

"It is not knowledge that moves the world but spiritual ideals and convictions".—*Vice-chanceller, Bombay University.*

"ஆஜ்ஞாசக்கரம் சுழல்வது ஆத்மலக்ஷியம் சன்மார்க்க உறுதி இவைகளாலன்றி சிற்றறிவாலல்ல."

### THIRD YEAR OF THE GREAT WAR.

### பாரதப்போரின் மூன்ருவது வருஷாரம்பம்.

இந்த ஆகஸ்டுமீ 4உ பன்று ஐரோப்பாவில் நடந்து வரும் பாரதப் போரின் மூன்ருவது வருஷாரம்பம் தொடர்ந்தது. சென்ற இரண்டு வருஷங்களில் நடந்த யுத்தத்தின் பலனை இந்தியா மந்திரியவர்கள் திரட்டி யெடுத்து அரசர் பிரதிநிதியவர்களுக்குத் தந்தியடித்திருக்கிருர். அதை அப்படியே எடுத்து முகப்பில் அச்சிட்டிருக்கிறோம். "ஜெர்மனி முதல் வருஷத்தில் தானே ப்ரான்ஸ் தேசத்தாரை நசுக்கி விடலாமென்று நினைத்தது. அந்த எண்ணம் பலிக்காமற் போய்விட்டது. பிறகு சென்ற வருஷத்தில் ருஷிய சைனியங்களை மடக்கி யடித்துத் தலையெடுக்க வொட்டாது செய்துவிடலாமென்று பார்த்தது. பலவிதங்களில் ஜெர்மானியர் ஜயமடைந்தாலும் ருஷியசைனியம் குலையவில்லை. ஜெர்மனியினுடைய சைனியங்கள் இன்னும் நிலைகுலைந்ததில்லை. இராணுவ ஸ்தானங்களில் அதற்கு இன்னும் கொஞ்சம் சைனிய பலம் மிகுதியிருக்கிறது. பஞ்சம் வருமென்கிற பயமில்லை யென்று சொல்கிறது. பணச்செலவு வேண்டிய அளவிற்கு கிடைக்கலா மென்கிற நம்பிக்கை யின்னும் இருக்கிறது. சண்டையில் சம்பந்தப்படாத தேசத்தார்கள் இன்னும் ஜெர்மனிக்கு விரோதமாக மாறவில்லை. ஆனல் முதலில் ஜெர்மனிக்குண்டான ஜயங்களைக் கண்டு அதனல் உண்டான உற்சாகம் இப்பொழுது இல்லை. ஜெர்மனியில் பொதுஜன அபிப்பிராயம் முன்போலின்றி நன்ருகமாறி யிருக்கிறது தெரிகிறது. ஜனங்கள் உற்சாகமிழந்து மனம் சலித்திருக்கிறதாகத் தெரிகிறது. ஜெர்மனி எதிரிகளை ஒருவர் ஒருவராக நசுக்கிவிடலாமென்கிற எண்ணம் இப்பொழுது அற்றுப்போய் விட்டது: ஜனங்கள் இனிமேல் என்ன ஆகுமோ வென்று சிந்திக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். ஜெர்மனியின் அரசிறைமுறை இந்த யுத்தச் செலவு அழிவைத் தாங்கிச் சமாளிக்கத் தக்கதாகவில்லை: இந்த யுத்தம் சீக்கிரத்தில் ஜெர்மனிக்கு அனுகூலமாக முடியும்படி முடித்துக் கொள்ள சரிப்படாவிட்டால் செலவுக்கு வருவாய் பற்ருது பெரிய திண்டாட்டம் நேரிடுமென்று தோன்றுகிறது. இராணுவத்தில் சேர்ந்து யுத்தம் செய்யப் பழகினவர்களை

யெல்லாம் சண்டைமுகத்துக் கனுப்பியான பிற்பாடு யுத்தப்பழக்கம் பெருதவர்களையும் சண்டைக்கு சித்தமாக விருக்கச் செய்திருக்கிருர்கள். 1916-17-ம் வருஷத்தில் இராணுவத்தில் சேரத்தக்கவர்களையெல்லாம் ஏற்கனவே சண்டைக்களத்துக் கனுப்பியிருக்கிருர்கள். பாக்கியிருக்கிறவர்களெல்லாம் திறம் குன்றினவர்களே. 46-வயது வரையிலுள்ளவர்களையெல்லாம் சண்டைமுகத்துக் கனுப்பியாய்விட்டது. இராணுவ ஸ்தானங்களில் காயம்பட்டு சொஸ்தமானவர்கள் தொகை ஒன்றரை அல்லது இரண்டு லக்ஷம் இருக்கும். 1918-வது வருஷத்தில் இராணுவத்தில் சேரத்தக்கவர்கள் இருக்கிருர்கள். இந்த சைனிய பலமெல்லாம் குலைந்துவிட்டால் கிழவர்களும் சிறு பிள்ளைகளும் தான் மிகுதியாயிருப்பார்கள். இந்த ஸ்திதியில் ஜெர்மனி அதன் எல்லைப்புறங்கள் எல்லாவற்றிலும் யுத்தத்தை நடத்திக்கொண்டு அதன் கூட்டாளிகளுக்கும் ஒத்தாசை செய்யவேண்டியிருக்கிறது. இது வரையில் ஜெர்மனிக்கு ஆபத்து வந்ததாகச் சொல்வதற்கில்லை. ஆனல் ஆபத்து சமயம் சமீபித்து வருகிறது. முதலில் கூட்டாளிகளுடைய கையில் யுத்ததளவாடங்களின் கையிருப்புக் குறைவினல் இது வரையில் ஜெர்மனியை ஒன்றும் செய்யக் கூடவில்லை. இப்பொழுது அவர்களுடைய கையிருப்புத் தளவாடங்களும் முஸ்தீபும் ஜெர்மனியைவிட பலப்பட்டுக்கொண்டு வருகிறது. ஜெர்மனிக்கு உழைப்பாளிகள் இன்னும் குறைவில்லாமலிருக்கிருர்கள். யுத்தத்தில் கைதி செய்தவர்களையும் அவர்கள் ஜெயித்த தேசங்களிலுள்ள குடிகளையும் உழைப்பாளிகளாக உபயோகித்து வருகிருர்கள்: ஆயினும் அத்தேசத்தார் சொந்த முயற்சியையன்றி சண்டையில் சம்பந்தப்படாத தேசங்களிலிருந்து ஒரு சகாயமும் பெறுவது சாத்தியமில்லை. கூட்டாளிகளோ அப்படிக்கின்றி தங்கள் சொந்த முயற்சியோடு யுத்தத்தில் சம்பந்தப்படாத தேசங்களிலிருந்தும் உழைப்பாளிகள், தளவாடங்களைச் சேர்க்கலாமாயிருக்கிருர்கள். ஜெர்மானியர் பிறதேசங்களோடு சம்பந்தப்படாதபடி மறியல் போட்டதனல் அவர்கள் இன்னும் வயிறு வாடும் ஸ்திதிக்கு வரவில்லை. ஆனல் அதிக நெருக்கடியாகத் தானிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை: இல்லாவிட்டால் மறியல் போட்டதைப்பற்றி அவர்கள் அவ்வளவு சீறிச்சினந்து விழுந்திருக்கமாட்டார்கள். ஆஸ்திரியாவின் கதியோ ஜெர்மனியின் ஸ்திதியைவிட இன்னும் திண்டாட்டமாகத்தானிருக்கிறது. 52-வயது வரையிலுள்ள மனிதர்களையெல்லாம் இராணுவத்தில் சேர்த்துக்கொண்டு சண்டை முகமனுப்பியிருக்கிருர்கள். 1918-ம் வருஷத்தில் இராணுவத்தில் சேரத்தக்கவர்களையும் இப்பொழுதே சேர்த்துக்கொண்டு சண்டைக்குத் தயாராக இருக்கச் செய்திருக்கிருர்கள். துருக்கி தேசத்தாரால் என்ன உதவி நேரிடுமென்று எதிர்பார்த்தார்களோ அது அங்கிருந்து கிட்டவில்லை. தற்காலத்துக்கேற்ற சைனியம் சேர்க்கவும் அத்தேசத்தாரால் முடியவில்லை. எதிரிகள் பாடு இப்படியிருக்க, ருஷியா, இத்தலி, க்ரேட் ப்ரிட்டன் தேசங்கள் அவர்கள் கையிருப்புச் சைனியங்களையெல்லாம் இன்னும் முற்றும் உபயோகப்படுத்தி விட்டார்களில்லை. ஆதியில் ஜெர்மனியின் கை யுத்ததளவாடங்கள் வெடிகுண்டு வகையராக்களில் மிக வலுத்திருந்தது. இப்பொழுது அந்த வலுக்குன்றியிருக்கிறது. ஜெர்மனி சென்ற இரண்டு வருஷங்களில் பெற்ற ஜயங்கள் பலவாயினும் இது வரவரக் குறைந்துகொண்டே வருகிறது. அவர்கள் ஜயம் இப்படியாகக் குன்றிவர, கூட்டாளிகள் கை முன்னிலும் இப்பொழுது பலப்பட்டு வருகிறது: அவர்கள் சைனிய பலமும் யுத்ததளவாடங்கள் முஸ்தீபுகளும் ஜெர்மனியிலும் மேலானதாக வளர்ந்து பலப்பட்டிருக்கிறது."

இப்படியாக இந்தியா மந்திரியவர்கள் படபடப்பின்றி நிதானம் தப்பாமல் சென்ற இரண்டு வருஷங்களில் நடந்த யுத்தத்தின் பலன்களைத் தாராதரமறிந்து மதிப்பிட்டுச் செய்தியனுப்பி யிருப்பது இன்னும் ஒரு வருஷம் ஆவதற்கு அனேகமாதங்கள் முந்தியே கூட்டாளிகள் கக்ஷி யுத்தத்தில் வலுத்து ஜயம் பெறலாமென்கிற எண்ணம் உதிக்கக் காரணமாயிருக்கிறது. இந்த எண்ணம் நிறைவேற வேண்டுமென்றே நல்லவர்களெல்லாம் ஜகதீசனைப் பிரார்த்தித்துக் கொண்டிருப்பார்கள் என்றும் அப்படி அவர்கள் கை பலக்க வேண்டுமென்று பிரார்த்திப்பதை எல்லாரும் ஒரு கடமையாகக் கொண்டு கடவுளைத் துதிக்கவேண்டுமென்றும் எல்லாரும் சொல்லுகிறபடி நாமும் சொல்கிறோம். "மெய்யே வெல்லும் பொய்யல்ல!" "தர்மமே ஜயம்." இதற்குச் சந்தேகமில்லை. ஏனெனில் கூட்டாளிகள் பக்ஷம் நியாயமிருக்கிறது என்பது உண்மையே.

ஆயினும் ஒன்று: கூட்டாளிகள் கக்ஷியைச் சேர்ந்தவர்களான க்ரேட் ப்ரிட்டன், ருஷியா, ப்ரான்ஸ், பெல்ஜியம், இத்தலி முதலான இந்த தேசத்தவர்கள் இந்த மஹாபார'த யுத்தத்தின் முக்கியார்த்தம் என்னவென்று சற்று ஆர அமர்ந்து சிந்திக்கத் தவறக்கூடாது என்று "இந்தியன் ஸோஷியல் ரிபார்மர்" பத்திரிகை கூறுகின்றது.

பகவான் ஒருவர் இருக்கிறார்: பகவத் சங்கல்பம் வீணாவதில்லை யென்பது உண்மையானால் மேற்படி தேசங்களிலுள்ள ஜனங்களுக்கு இந்த யுத்தத்தினால் நேர்ந்த கஷ்டநஷ்டங்களும் பொருளழிவு உயிரழிவு முதலான ஸம்ஹார சிக்ஷைகளும் நேர்ந்தது வீண் சம்பவம் என்று நினைக்கக்கூடாது. காரணமின்றிக் காரியமில்லை யாதலாலும் பிரத்தியேக நபர்களுக்குண்மையான கர்மவிதி தேசசமஷ்டியில் சேர்ந்த ஒவ்வொரு தேசத்தாருக்கும் உண்டாதலாலும் எண்ணிறந்த ஜனங்கள் ஆண், பெண், குழந்தைகள் உள்பட இந்தக் கொடுமையான யுத்த சம்பவங்களால் துன்புக்காளாகி துக்கப்பட்டுத் துயரிலாழ்ந்தி வருந்துவது வீணில் வந்ததாக நினைக்கக்கூடாது என்று கூறுகிறது.

அவர் ஜெர்மானியரைப்போல் "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்று முரட்டு பலத்தையே பெரிதாக வெண்ணி அசுர பூஜை செய்துவர ஏற்பட்டார்களில்லையாயினும் இஃதெல்லாம் வெள்ளைக்காரர்கள் சம்பந்தப்பட்ட மட்டிலின்றி, கறுப்பு மனுஷர்கள் முதலான வர்ண பேதமுள்ள ஜாதியாரோடு அவர்கள் செய்து வரும் கூட்டுறவில் இந்த மேலான தர்மத்தை அவர்கள் அநுஷ்டானத்தில் கொண்டு வந்திருக்கிறார்களோவென்று மாரில் கை வைத்துப் பார்த்துக்கொண்டு அவர்கள் மனச்சாக்ஷி பறிய ஹிருதய பூர்வமாய் உண்மையை உள்ளபடி சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகிறது. ஜெர்மனியின் அடாபிடித்தனத்தைக் கண்டு சிங்கம்போல் சினந்தெழுந்த இவர்கள், வர்ணபேதமுள்ள ஜாதியார் சம்பந்தப்பட்ட மட்டில் அதே அடாபிடித்தனத்தை தம்மட்டில் அநுசரிப்பது தெய்வசம்மதமாகாது என்று உணரவேண்டுமென்று கூறுகிறது. 1870-ம் வருஷத்தில் பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் நடந்த யுத்தத்தில் ஜெர்மன் சைனியங்களின் யுத்தக்கொடுமையைக் கண்டித்துப் பேசினதைக் குறித்து அப்பொழுது ஜெர்மன் சான்ஸெலராயிருந்த ப்ரின்ஸ் பிஸ்மார்க் அவர்கள் 'எங்களைப்பற்றிச் சொல்வதை உங்களுக்கே பொருந்தத்தக்கதாகத் திருப்பி வாசியுங்கள்' என்று பதில் சொன்னார். அதையெல்லாம் சொல்லி அஹிதமான பழைய ஞாபகங்களைக் கிண்டிவிடவேண்டு மென்பது அப்பத்திராசிரியருடைய எண்ணமில்லை. ஆனால் இதுமட்டும் நிச்சயமாய் உறுதியாய் உணர்ந்து உணர்ந்தபடி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறதாகக் கூறுகிறார். அது என்னவெனில்:—மனுகுலத்தார்

எல்லாரும் வானத்தின்கீழ் குடியிருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் கடவுளின் குழந்தைகளே. பரமதயாளுவான கடவுள் வெள்ளை நிறமுள்ள குழந்தைகளுக்கும் வர்ணபேதமுள்ள குழந்தைகளுக்கும் தாரதம்மியம் பார்ப்பதில்லை; ஓரவஞ்சனை செய்வதுமில்லை. இது சத்தியம். ஆதலால் வெள்ளைக்கார ஜாதியார் வர்ணபேதமுள்ள இதர தேசத்தார்களோடு கூட்டுறவு செய்வதில் "தன்னைப்போல் பிறரை நினை" என்கிற தர்மத்தை யனுசரித்து நடக்கவேண்டும். அவர்கள் அப்படி நடந்து கொள்ளாவிட்டால் உலகத்தில் சாசுவதமான சமாதானம் ஏற்பட வழியில்லை; ஐசுவரிய விருத்தியும் சாசுவதமாக ஏற்படாது என்கிறார்.

அவர்கள் மேல் மட்டும் குற்றம் சொல்வதிற் பயனில்லை. வர்ணபேதமுள்ள ஜாதியார்களும் ஒற்றுமையின்றி நெல்லிக்காய் மூட்டைகளாகச் சண்டை சச்சரவு போட்டுக்கொண்டு பலவீனப்பட்டிருந்ததால், வெள்ளை ஜாதியார் அவர்களை தர்ம விரோதமாக நடத்தும்படி தூண்டினவர்களாகிறார்கள். அந்தப் பாபத்துக்கும் அவர்கள் பரிகாரம் தேடிக்கொண்டு எல்லாம் வல்ல கடவுள் முன் தலைகுனிந்து வணங்கி நின்று "ஈசனே எல்லாம் நின்செயல், எல்லாம் நின்னருள், எல்லாம் உன் சங்கல்பம்! உன்னிஷ்டமன்றி என்னிஷ்டம் பலிக்காது!" என்று உள்ளமுணர உணர்ந்து ஈசுவர சங்கல்பத்தை யறிந்து அறிந்தமட்டில் அதற்கு அனுகூலமாகவே நடந்துகொள்ளவேண்டும். இவ்வுலகத்திலுள்ள எல்லாருக்கும் இந்த நற்போதனை புகட்டி நற்சிந்தனை யுண்டாகவே இந்த மஹாபாரதப்போர் உண்டானதாகக் கருதவேண்டியது. இந்த யுத்தத்தின் நற்போதனைகள் அரசியல், அரணியல், படையியல், குடியியல் என்றுள்ளவை மட்டுமாயின்றி மனிதன் தனது ஆத்ம க்ஷேமத்தையும் ஆத்ம சுகத்தையும் அறிந்து பிழைக்கவேண்டுமென்றுள்ள பெரிய நற்போதனையும் இதனால் புகட்டப்படுகிறது என்பதை எல்லாரும் சிந்தையில் வைக்கவேண்டும் என்று உருக்கமான வார்த்தைகளால் அர்த்தம் நிறைந்த வாச்சியாமிர்தத்தை அன்புடன் போதிக்கிறார். இதையெல்லாரும் கவனிக்க வேண்டியது மன்னுயிர்க்குற்ற கடன்.

## SCHOOL-GARDENING OR NATURE-STUDY AND CHILD-STUDY.

## பள்ளிப்பயிர்ச்சியும் தோட்டப் பயிர்ச்சியும்.*

"To the solid ground
Of Nature trusts the mind which builds for aye."—
*Wordsworth.*

"Fine character is the gift of the limitless ocean, the rugged mountain, the mighty river, the quiet valley with the cloud-flecked blue brooding over all."

பள்ளியில் பிள்ளைகளைப் பழக்குவதானது தோட்டப்பயிர் செய்வதொக்கும். தோட்டமானது எப்படி நீர்வளம், நிலவளம், பயிர்வளம் பண்நேர்த்தியெல்லாம் சேர்ந்து விளங்குகிறதோ அப்படிப்போல பள்ளிக்கூடமும் பிள்ளைகள் பழகக் கூடும் இடத்தின் நேர்த்தி, அதிலுள்ள கட்டடத்தின் நேர்த்தி, பிள்ளைகளின் மனவெழுச்சி, உபாத்தியாயர்களின் போதனநேர்த்தி இவைகளெல்லாம் சேர்ந்து விளங்குவதாயிருக்கிறது.

தோட்டத்தில் பயிர் பச்சைகளும் புஷ்பங்களும் கொடி செடிகளும் காய்கனி கிழங்குகளும் ஒன்றோடொன்று பொருந்த அமைந்து செய்நேர்த்தியாலும் பயிர்த்தொழில் விசேஷத்தாலும் பலனையளிப்பதோடு கண்ணுக்கு ரமணீயமான ஸ்ரீங்காரமும் விளங்குவதாயிருக்கிறது. "சௌந்தரியலஹரி" யென்று நன்றாகச் சொன்னார்கள். 'லஹரி' யென்பது போதையை உண்டுபண்ணி உற்சாகத்தைக் கிளப்பும் வஸ்து. 'சௌந்தரியம்' என்றால் அழகு. அழகில் ஈடுபட்டமனம் உண்மையை உணரும் பக்குவம் பொருந்தினதாகிறது. உண்மையென்றால் தோன்றிமறைவதொன்றும் ஜாலத்தோற்றம் மாத்திரமாயின்றி ஸ்திரமாக உள்ளது ஒன்று எதுவோ அதற்குப்பெயர். ஆதலால்தான் இதற்கு ஸம்ஸ்க்ருதத்தில் ஸத்யம் என்று பேர்: ஸத்யம்-அழியாதது: மாறாதது என்றும் சொல்லலாம்.

* *Vide* footnote in English at the end of the article. pp 137 & 138.

"எள்ளுப்போட்டால் கொள்ளுமுளைக்காது" என்பது ஸத்யம் அல்லது உண்மை. ஏனெனில் எள்ளிலிருந்து எள்ளுச்செடிதான் முளைக்கும். இதற்கு † பீஜதத்துவம் அதாவது வித்துக்குள் இருக்கும் உண்மையென்றுபேர். இந்த ஒரு தத்துவத்தைக் குழந்தைகள் தோட்டத்தில் பயிர்செய்து பார்த்து, பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரமாய் மனதிற்பட வுணர்ந்து, உள்ளத்தில் இந்த உண்மை பதியப்பெற்றால் அவர்கள் "நன்மைவிதைத்தால் நன்மைவிளையும்" "தீமை விதைத்தால் தீமை விளையும்" என்பதிலுள்ள தர்ம மர்மத்தை யுணரும் சக்தி வாய்ந்தவர்களாகிறார்கள். இப்படி பிரத்தியக்ஷப் பிரமாணமாக ஒரு உண்மையைக் கண்கூடாகக் கண்டுணர்ந்து—முகக்கண்ணால் பார்த்து மனக்கண்ணால் கிரகித்ததை உளக்கண்ணால் உண்மைகண்டுணர்ந்து, அந்த உண்மையை சகளமாகவும் (concrete form) கேவலமாகவும் (abstract form) நிஷ்களமாகவும் (absolute form) அறிவோடமர்ந்துணர்ந்து (assimilate) உணர்ந்த உணர்வுமழிந்து சகஜானுபவமாகக் கண்டு தேறுவதுதானே வித்தியாமுறை (process of education) என்று சொல்லப்பெறும். இந்த வித்யாமுறையை யனுசரித்து சிக்ஷை, தீக்ஷை, அப்பியாசம், அனுபவம் என்கிற நான்குபடிகளும் ஏறிச்சென்று இந்த நான்கும்சேர்ந்து ஒன்றான "சகஜானுபவம்"எதுவோ அதுதான் உண்மையான ஞானநிலை. அப்படியென்றால் அறிவின் ஸ்வபாவம். இதற்கு ஸம்ஸ்கிருதத்தில் சித்-சக்தியென்று பெயர். சித்-என்றால் அறிவு. சக்தி-யென்றால் வல்லமை. "அறிவின் வல்லமை" யென்பது அதன்பொருள். இது பதப்பொருள் (Literal Meaning). வாச்சியார்த்தம் செய்யும்பொழுது (context) இதற்கு 'தான் ஸ்வயம்பிரகாசமாகவிருந்து கொண்டு தன் ஸந்நிதான மாத்திரத்தால் எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சக்தி' என்கிறபொருள் அமையும். தானே தானாய் ஸ்வயம்பிரகாசமாயிருக்கும் இலக்ஷணம் பொருந்தியது அறிவு (சித்.) இதன் சக்தி "சித்-சக்தி." இதற்கு சக்தி தத்துவம் என்று பேர்.

† Law of Conformity or 'Being true to type."

பீஜதத்துவம் 'சகலரூப'மானது (concrete.)
சக்திதத்துவம் 'கேவலரூபம்' (abstract)
பீஜதத்துவமும் சக்திதத்துவமும் சேர்ந்து பரிமாணவிதி (Evolution theory) யாகிறது.
இதற்கு "கீலகம்" (முளை) யென்றுபேர்.

இப்படியாக சகல-கேவல சம்பந்தத்தினால் பரிமாணக் கிரமம் ஏற்படுகிறது.

இந்த சம்பந்தம் நிலம், நீர், சீதோஷ்ணபக்குவம் என்கிற சந்தர்ப்ப விசேஷங்களினால் லபிக்கிறது (உண்டாகிறது).

வித்தை நிலத்திலிட்டு நீர்வார்த்து அதற்கு வேண்டிய சீதோஷ்ண பக்குவம் அமையப் பார்த்துவந்தால் அது தானே முளைவிட்டுக் கிளம்பி கிளைவிட்டு வளர்ந்து தழைத்துச் செழித்துப் பூத்துப் பிஞ்சுவிட்டுக் காயாகிப் பழுத்துப் பலனைத்தரும். அந்தப்பலனும் அதனுள் போட்டவித்தை அடக்கிக்கொண்டிருக்கும். இவையெல்லாம் "கீலகம்" என்கிற (முளைக்கும்) தர்மத்தைச் சேர்ந்தவையாதலால், பரிமாண்விதி முற்றுக்குமே "கீலகம்" என்கிற பரியாயநாமம் இட்டுக் குறிக்கப்படும்.

இப்படியாக பீஜம் (வித்து), சக்தி, கீலகம் (முளை) யென்கிற மூன்றும் உயிரின் சிருஷ்டி, ஸ்திதி, லயம், (பிறப்பு, வளர்ப்பு, இறப்பு) என்கிற முக்குண தர்மத்தை விளக்கும் உதாஹரணமாக (illustrative example) விளங்குகிறது.

இப்படியாக பிரகிருதிதர்மத்துக்கும் ஜீவதர்மத்துக்குமுள்ள சம்பந்தமும் ஐக்கியலக்ஷணமும் விளங்குவதாகிறது.

இப்படியே தோட்டப்பயிர்ச்சி செய்வதிலிருந்து மனப்பயிர்ச்சி செய்வதின் முறையும் தனக்குத்தானே விளங்குவதாகும்.

ஆகையால் தான் ஒவ்வொரு வீட்டிலும் தோட்டமிருக்க வேண்டியதோடுகூடப் பள்ளிக்கூடங்களிலும் தோட்டம் இருக்கவேண்டும்.

"பருவத்தே பயிர்செய்" என்பது தோட்டப் பயிர்ச்சிக்கும் மனப்பயிர்ச்சிக்கும் பொருந்திய தர்மம்.

"பிரகிருதியினுண்மையில் பரமனைக் காணலாம்."

ஆகையினால் பிரகிருதி வித்யாப்பியாஸம் குழந்தைகளுக்கு பாலப்பருவம் முதல் அமைந்துவர ஏற்பாடு செய்யவேண்டும்.

நிலத்தைப் பண்படுத்துவதுபோல் மனதைப் பண்படுத்துவது சிக்ஷை (Discipline)

பண்படுத்தின நிலத்தில் விதைவிதைத்துப் பயிர், களைமூண்டு சாகாமல், களைபிடுங்கிக் காப்பாற்றிப், பலனளிக்கும்வரையில் அதைக் காப்பதுபோல், (Discipline) சிக்ஷையினால் பண்படுத்தப் பெற்ற குழந்தைமனம் கோணாது (கெட்டவழியில் பிரவேசிக்காது) கெட்ட எண்ணங்கள் பழக்கங்கள் பற்றாதபடி சகவாஸதோஷம் நீக்கி ஸத்சங்க (நல்ல சகவாஸ) விசேஷத்தால் "யத்பாவம் தத்பவதி" என்கிற சங்கல்ப சக்தியின் விசேஷத்தை யுணர வுணர்ந்து அனுபவத்தில் அதை உபயோகிக்கப் பழகுவது தீக்ஷை. (Realisation).

சங்கல்பசக்தியின் விசேஷமறிந்தபின் அதை யடக்கியாண்டு இச்சாசக்திக்குட்பட்டதாக (இஷ்டவிரோதமான எண்ணங்கள் உதிக்காமலும், விஷயப்பற்று காரணமாய் இச்சா சக்தி மனவழிப்பட்டுச் சிதறுண்டுபோகாமலும்) காப்பதும், அங்கிலையில் மனம் கட்டுக் காவலின்றித் தானாக அறிவுக்குக் கீழ்ப்படிந்து நிற்கப் பழகுதலும், அந்த அப்பியாசத்தில் சித்திபெறுதலும் அனுபவம் (Self-Experience). அப்படியென்றால் அறிவுமயமான தன்னைத்தானே யனுபவித்து நிற்றல். (இதில் அப்பியாசமும் அடங்கும்). இந்த சிக்ஷை, தீக்ஷை, அனுபவம் என்கிற மூன்றும் வித்யா பீடத்திற்கு இன்றியமையாத மூன்றுகால்கள்.

இந்த மூன்றுசாதனங்களைக்கொண்டு ஸர்வ கலைகளையும் கற்றுணரலாம். இந்த மூன்று சாதனங்களும் குழந்தை-மனதிற்கு இயற்கையாக அமைந்துள்ளன. அவை மாறிப்போகாதபடி அவற்றை பாலப்பருவம் முதல் விருத்தி-ஞானத்தால் (Educational progress) வளர்ந்து வரல்வேண்டும். இது பாலப்பருவம் முதல் இடைவிடாது பழகிவரவேண்டிய வித்யா சாதனங்களாதலால் முதற்படியான சிக்ஷைக்கு "பாலசிக்ஷை" யென்கிற சிறப்புப்பெயர் வந்தது.

"பாலசிக்ஷை" யென்றாலும் "அக்ஷராப்பியாஸம்" என்றாலும் இரண்டும் ஒன்றையே குறிக்கும். முன்னது கர்த்தாவைப்பற்றி வந்த காரணப்பெயர். பின்னது காரியம்பற்றி வந்த காரணப்பெயர். (அக்ஷர+அப்பியாஸம்) அழியாத தத்துவமாகிய நாதத்தை (ஒலியாகவும்) சப்தமாத்திரமாகவும், (வடிவாகவும்) வரியுருவமாகவும் (அருவமாயுள்ள அதன் அழியாத தத்துவஞானம் சித்திக்கும் வரையில்) மனப் பழக்கத்தால் அப்பியசிப்பது அக்ஷராப்பியாஸம்.

அ என்னும் சப்தத்தை அக்ஷர ஒலியாகவும்,

அ என்னும் வரியுருவத்தை அக்ஷரவடிவாகவும்,

அ எனபதின் லக்ஷியார்த்தமான அருவமான மஹாமந்திர சக்தியை "நாதவடிவு" ஆகவும் உணர்வது "அக்ஷராப்பியாசமாம்."

'அ' என்னுமெழுத்து சப்தத்துக்கெல்லாம் முதல் "அகரமுதலவெழுத்து ஆதி"—அதுபோல பகவானை முதலாகக்கொண்டது உலகு.

ஆதலால் "அ" என்னும் முதலெழுத்துடன் துவங்கும் அப்பியாசம் உலகஞானம் முற்றுமுணர்ந்து இந்த உலகத்துக்கெல்லாம் முதலாயிருக்கப்பட்டவன் 'பகவான்' என்று உணரும் வரையில் தொடர்ந்து செல்லும். இடையில்

அப்பியாசம் அறுந்து (விட்டுப்) போனால் வந்தது மோசம். "கற்றதனாலானபயன்" இல்லையாகிவிடும். இவ்வளவையும் அடக்கித் தாயுமானவர் (சித்) தேவியைத் துதிசெய்து தனக்கு வித்தையளிக்கும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார். அதைச்சொல்லி இதை முடிப்போம்.

"பூதமொடு பழகிவளர் இந்திரியமாம் பேய்கள்
புந்தி முதலானபேய்கள், போராடு
கோபாதி ராக்ஷஸப் பேய்களென் போதத்தை
யூடறுத்து வேதனைவளர்த்திடச் [லாம்
சதுர்வேதவஞ்சன் விதித்தா னிவ்வல்லலெல்
வீழும்படிக்குனது மௌனமந்திராதிக்கிய
வித்தையை வியந்தருள்வையோ
நாதவடிவாகிய மஹா மந்திராதி ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞான ஆனந்த மயிலே
வாதமிடு புறச்சமயம் யாவுக்கு முணர்வரிய
மஹிமைபெரு பெரிய பொருளே
வரைராஜனுக் கிருகண் மணிபா யுதித்த
மலை-வளர்காதலிப்பெண்உமையே."

மலைராஜன் ஜடப்பொருளுக்கெல்லாம் மேலான தலைவன். இதன்பொருள்:—

ஜடசக்தி நாயகனாகிய உன்னதமான உத்தம பர்வதராஜனுக்குக் குருடனுக்குக் கண் கிடைத்தாப்போல் பார்க்கும் சக்தியுண்டாகச்செய்தவதரித்த ஜிதேந்திரிய ரூபியாகிய (உமை) சித்சக்தியே,

அஹக்கண் (உளக்கண்) பார்வையின்றி புறக்கண் பார்வைமட்டும் கொண்டு உண்மையுணராது வாதமிட்டுக்கொண்டிருக்கும் சமயமார்க்கர்களால் உணர்வதற்கு அரிதான மஹிமை பொருந்திய பெரிய (சின்மயானந்தப்) பொருளே,

ஞான ஆனந்தமயிலே, நற்சமயமான
(உண்மைப்)பயிர் தழைத்துச் செழிக்க
(அருள்மழை பொழிய) வருமேகமே [கடந்த
நாத-தத்துவத்துக் கப்பாலுள்ள எல்லாங்
(நிருபாதிக) வெட்டவெளியே
நாதசக்தியின்வடிவாகவிருந்து உருக்கொண்
உபாஸனா தேவதையாக விளங்கும் [டு
மந்திர சக்திகளுக்கெல்லாம் மேலான
மஹாமந்திராதி ரூபியே
எனது இந்திரியங்கள் புத்திமுதலான
அந்தக்கரணங்கள் பூதமொடு பழகிய பழக்க
வாசனையால் அவ்வழியில் சென்று
என் அறிவை இடையறாது விளங்கச்செய்யாது
ஊடறுத்து மின்மினிப் பூச்சிபோல்
அதன் ஒளிமங்கி விட்டுவிட்டொளிரச்
செய்யும் சிருஷ்டிகர்ம அல்லல் ஒழிய
உன் வித்தையை எனக்கு வியந்தருள்வையோ.

வியந்து,—விநோதசக்திவாய்ந்ததாய்:

இந்தவிநோதசக்தி* எல்லாசேதனப்பொருள்களுக்கும் பொதுவாயுள்ளதாயினும் மனிதனுக்கு மற்ற எல்லாப்பிராணிகளையும்விட மிக விசேஷமாயமைந்துள்ளது. இந்த வியப்பு சக்தியில்லாவிட்டால் மனதுக்கு உற்சாகமும் உள்ளக்கிளர்ச்சியும் இல்லையாகும். இதைப் புகழ்ந்து "அதிசயப்பத்து" பாடிய மாணிக்கவாசகர் இதன் அதிமேலான உசித குணத்தை யெடுத்துப்பாடியிருக்கிறார். குருடன் கண் பெற்றாற்போல உலக ஞானத்திலுழன்ற மனம் பரஞான சித்திபெற்றபொழுதும், அந்த அனுபவ முதிர்ச்சியில் நிரதிசயானந்த நிலைபெற்றவிடத்தும் பகவானுடைய அருட்திறத்தைக் கண்டு அதிசயித்து வியக்கும் என்பது அதன் பொருள்.

"மண்ணிலேபிறந்திறந்து மண்ணாவதற்
கொருப்படுகின்றேனை
அண்ணலாண்டுதன் னடியரிற்கூட்டிய
அதிசயங்கண்டாமே."

"* The instinct of curiosity, with its correlative the emotion of wonder, is certainly one of the principal instincts of man, and is even more marked in him than in his nearest animal relatives. Dr. McDougall, the highest authority of our time on the subject, gives the following conclusions of his research:—

"This instinct, being one whose exercise is not of prime importance to the individual, exhibits great

## SUGGESTIONS FOR NATURE-STUDY:

### SEA AND LAND BREEZES: HOW THEY ARE CAUSED.

## பிரகிருதி வித்யா பாடக் குறிப்புகள்.

### கடற்காற்று, தரைக்காற்று: இவற்றின் உற்பத்திவிவரம்:



(ஜூன்மாசம்) நமக்கு நல்ல கோடைகாலம். வெயிலினால் தாபமதிகரிக்கும்போது எப்போது குளிர்ந்தகாற்று அடிக்குமென்றெதிர் பார்த்துக் கொண்டிருக்கிறோம். கடலோரத்தி லுள்ள ஊர்களுக்குப் பன்னிரண்டு மணிக்கு மேல் குளிர்ந்த கடற்காற்றுப் புறப்பட்டு வெயிலின் கொடுமையைத் தணிக்கும். கடற் காற்றுத் திரும்பவில்லையே திரும்பவில்லையே யென்று ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்து அது வந்தவுடன் தான் நமக்கு உற்சாகமுண் டாகிறது. கடலோரத்திலில்லாத ஊர்களுக்கு சாயங்காலத்தில் தென்றல் காற்றடித்து உஷ்ணத்தைத் தணிக்கும். இப்போது கடற் காற்றானது எப்படியுண்டாகிற தென்று பார்ப்போம். கடலோரத்திலிருக்கிறவர்களுக்குத் தினம் கடற்காற்று பிற்பகலிலும் தரைக்காற்று முற்பகலிலுமாக வீசுகின்றன. குளிர்ந்து வீசும் கடற்காற்று எப்படியுண்டாகிறதென்றும் உஷ்ணமாகவீசும் தரைக்காற்று எவ்வாறடிக்கிறதென்றும் நம்மில் எத்தனைபெயர் யோஜித்துப் பார்க்கிறோம். சூரியசந்திரன்உதித்து அஸ்தமிக்கிறதுபோல் தவறாமல் தினந்தோறும் இந்தக் காற்றுகளடித்துக் கொண்டிருக்கின்றனவே. அது என்னத்தினாலென்று நாம் அனேகமாய் விசாரிக்கிறதில்லை.

நாள்தோறும் நாம் பார்த்துக் கொண்டிருக்கும் வஸ்துக்களிலும் விஷயங்களிலும் விசேஷமிருக்கிறதாக நமக்குத் தோன்றுகிறதில்லை. மலையடியிலேயே பிறந்து வளர்ந்தவனுக்கு அந்த மலையினுயரமும், அதின் வெவ்வேறு விதமான கற்களும் செடி கொடிகளும் ஆச்சரியமாய்க் காணப்படாது. மலையைப்பார்க்காதவன் அதைக் கண்டவுடனே அதிலுள்ள கல்லுகளையும் செடிகளையும் கண்டு ஆனந்தப் படுவான். கடலோரத்தில் பிறந்து வளர்ந்தவர்களுக்கு அதன் பெருமையும் அலை முதலானவைகளும் விசேஷமாகத் தோன்றாது. அதைப் பார்க்காதவன் முதலில் கண்டவுடன் ஆச்சரியப்படுவதோடுகூட எப்படி ஈசுவரன் சிருஷ்டித்தானென்று யோஜிப்பதுமுண்டு. சாயங்காலவேளையில் தினந்தோறும் கடற் கரைக்குக் காற்றுவாங்கப் போனாலும் அங்கே நாம் படுத்து விளையாடும்படியான மணல் எப்படிஅங்கே வந்தது, எங்கேயிருந்து உற்பத்தி ஆயிற்றென்று யோஜிக்கிறோமா? ஈசுவரசிருஷ்டியானது யோஜித்துப் பார்த்தால் அற்பமாகத்தோன்றும் பதார்த்தத்திலும் வெகு ஆச்சரியமாயிருக்கிறது. ஒவ்வொன்றையும் கவனித்துப் பரிசோதித்துப் பார்த்தால் ஈசுவரன் மகிமை புலப்படும். பிரபஞ்ச சிருஷ்டியின் தத்துவமும் உண்மையும் விளங்கும். பார்க்கப் போனால் சாதாரணமாய் ஒருபுளியம் விரையை

---

individual differences as regards its innate strength; and these differences are apt to be increased during the course of life, the impulse growing weaker for lack of use in those in whom it is innately weak, stronger through exercise in those in whom it is innately strong. In men of the latter type it may become the main source of intellectual energy and effort; to its impulse we certainly owe most of the purely disinterested labours of the highest types of intellect. It must be regarded as one of the principal roots of both science and religion."

One of the biological facts and national tendencies which the war has revealed to thinking minds is the important one that "We fail to love the truth, however much it may interest us and excite the instinct of curiosity, because we fear that it will somehow get us into trouble." This is one of the defects of cram and conventional methods in educating the child-mind wherein Nature-Study does not find a place. Wordsworth says that "Nature never did betray the heart that loved her." "We cannot believe that Nature never will betray the heart that trusts her." It was Carmen Sylva who said: "Simple truth is as complex as woman." And no true woman accepts and yields herself to the man who but half-trusts her. Conventionality in the education of the child thus breeds "A fear of the truth" which is "based upon the implicit if not explicit philosophy that Nature can only be trusted so far as one sees her, if so far."

"To the solid ground
Of Nature trusts the mind which builds for aye."—
*Wordsworth.*

We refer those interested on the subject to Professor R. A. Gregory's book "DISCOVERY; or *The Spirit and Service of Science.*" (To be had of the Lalita Publishing Co.)

மண்ணில் போட்டால் நாலு ஐந்து நாளுக்கெல்லாம் முளைக்கிறதே; அதெப்படியென்று கேட்டால் அதற்குப் பதில் சொல்லுவது எவ்வளவு கஷ்டம். நம்மில் எத்தனை பேர்களுக்குத்தான் சரியானபதில் தெரியும். ஆகையால் அற்பமாய்க் காணப்படும் விஷயங்களையும் நன்றாகக் கவனித்துப் பார்க்கவேண்டியதவசியம்.

கடற்காற்று.—கடற்காற்று குளிர்ந்து வீசுகிறதற்குக் காரணம் அக்காற்று சமுத்திரத் தண்ணீரின்மேற்பட்டு வருவதாலென்று எல்லாருக்குந் தோன்றலாம். ஆனாலக்காற்று பிற்பகலில் மாத்திரம் அடிக்கிறதற்குக் காரணமென்னவென்று பார்ப்போம். சூரியன் பிரகாசத்தால் எல்லா வஸ்துக்களும் உஷ்ணப்படுமென்பது தெரிந்தவிஷயம். வெயிலில் ஒரு கல் கிடந்தால் அது சுட்டுப்போகிறது, நம்முடைய கண்ணுக்குத் தெரியாத காற்றுமவ்வாறே. மழைகாலத்திலும் பனிகாலத்திலும் காற்றுக் குளிர்ந்தடிக்கிறது. வெயிலதிகமாயிருக்கும் கோடைகாலத்தில் காற்று வெப்பமாயிருக்கிறது. அடுப்பண்டையிருந்தால் அடுப்பில் பட்டுவரும் காற்று உஷ்ணப்பட்டு நம்மேல் உஷ்ணமாயடிக்கும். வெயிலில் ஒரு கருங்கல், கட்டை, ஒரு பாத்திரத்தில் ஜலம் இவைகளையெல்லாம் வைத்துவிட்டுக் கொஞ்சநேரத்திற்கெல்லாம் பார்த்தால் கருங்கல் அதிகமாகவும், கட்டை கொஞ்சமட்டாகவும் சுட்டிருக்கும். ஜலம் எல்லாவற்றைக்காட்டிலும் குறைச்சலாக உஷ்ணப்பட்டிருக்கும். செம்பு பித்தளைப் பாத்திரத்தில் வைத்திருந்தால் அந்தப் பாத்திரம் உஷ்ணப்பட்டுத் தண்ணீரும் சுடலாம். மரப்பாத்திரத்தில் வைத்தால் சீக்கிரம் சுடாது. இதனால் நமக்கென்ன தெரிகிறதென்றால் சூரியன் வெயிலினால் சில பதார்த்தங்கள் அதிக சீக்கிரத்திலும் சில கொஞ்சம் மெதுவாகவும் உஷ்ணப்படுகின்றனவென்று தெரிகிறது. காலையில் சூரியன் உதயமானதுமுதல் அவன் கிரணங்கள்பட்டு உலகத்திலுள்ள வஸ்துக்கள் கொஞ்சம் கொஞ்சமாய்ச்சுட ஆரம்பிக்கும். காலையில் சூரிய வெப்பம் அதிக உக்கிரமாயிராது. நாழிகையதிகரிக்கஅதிகரிக்க உஷ்ணமும் ஜாஸ்தியாகி எல்லாம் சுட்டுப்போகின்றன. கடல் நீருமப்படியே காலையில் அதிகமாய் உஷ்ணப்படாது. வெயில் ஜாஸ்தியாக ஆகத்தண்ணீரிலும் அதிக உஷ்ணம்படுகிறது. ஆனால் முன்னேசொன்னபடி தரையும் அதிலுள்ள வஸ்துக்களும் சீக்கிரம் உஷ்ணப்பட்டுப்போகும். தண்ணீரோ அவ்வளவு சீக்கிரத்திலாகிற தில்லை. அதிகாலைவேளையில் பார்த்தால் தண்ணீரும் தரையும் உஷ்ணத்தில் ஒன்றுக்கொன்று வித்தியாசமில்லாமலிருக்கலாம். எட்டுமணி சுமாருக்குத் தரை கொஞ்சம் சுட ஆரம்பிக்கும். சுமார் 11, 12 மணிக்கு தரை கொதித்துப் போய் விடும். கடலோ அதிகமாய்ச் சுட்டுப்போகிறதில்லை. தாரையானது சுட்டும் கடல் சுமாராகக் குளிர்ந்து மிருக்கிறதினால் என்ன உண்டாகின்றதென்று பார்ப்போம். நம்மைச் சூழ்ந்திருக்கும் காற்றும் உஷ்ண சீதள சம்பந்தத்தினால் முறையே உஷ்ணப்பட்டும் குளிர்ந்தும் வருமென்று கண்டிருக்கிறோம். அடுப்பண்டையிலிருக்கும் காற்று எவ்வாறு சுட்டுப்போகிறதோ அவ்வாறே தரையைச் சூழ்ந்திருக்கும் காற்றும் சுட்டுப்போகும். கடலைச் சூழ்ந்திருக்கும் காற்று தரையைச் சூழ்ந்திருக்கும் காற்றைப்போல் சுட்டுப்போகாமல் சுமாராய்க் குளிர்ந்திருக்கும். ஒரு பக்கத்தில் காற்றுச்சுட்டும் இன்னொரு பககத்தில் குளிர்ந்து மிருக்கும் காற்றுகள் அப்படியப்படியே யிருக்குமாவென்று பார்ப்போம். அசையாப்பொருளாகிய கல் முதலானவை இருக்குமிடத்திலேயேயிருக்கும். காற்று எப்போதும் அசைந்துகொண்டேயிருக்கும். ஒரு விநாடியிலிருந்தவிடத்தில் இன்னொரு விநாடியிலிருக்காது. அசைவதானது நமமுடைய கண்ணுக்குத் தெரியாமற்போனாலும் ஒரு விதமாயறியலாம். ஜன்னலைச் சாற்றிவிட்டுக் கொஞ்சம் திறந்துவைத்து அதின்வழியாக

சூரியன் வெளிச்சம் ஒரு அறைக்குள் வரும்படி செய்தாலும்சரி, இல்லாவிட்டால் ஓட்டில் ஒரு துவாரத்தின்வழியாக சூரியவெளிச்சம் வந்தாலும்சரி: கத்தையாய்வரும் வெளிச்சத்தில் பார்த்தால் சின்னத்தூசியும் குப்பையும் கிடுகிடென்று போய்க்கொண்டும் வந்துகொண்டுமிருக்கும். அந்தத் தூசிகள் ஓடுவதற்குக் காரணம் காற்று. ஆற்றில் தண்ணீர் ஓடும்போது இலைசெடிகளைத் தன் வேகத்தால் கொண்டுபோவதுபோல், காற்றும் தான் போகும்போது தூசிகளையடித்துக் கொண்டுபோகும். சாதாரணமாய்க் கண்ணுக்குத் தெரியாது. வெளிச்சத்தினல் தூசிதுப்பு போகிறது தெரிகிறதனல் காற்றின் ஓட்டத்தை ஊகிக்கிறோம். இப்போது தரையின்பேரிலும் தண்ணீரின்பேரிலுமுள்ள காற்று என்ன செய்கிறதென்று கவனிப்போம். அதை யறிவதற்குமுன்னலே உஷ்ணப்படுவதால் பதார்த்தங்கள் ஏதாவது மாறுதலை யடைகின்றனவாவென்று பார்க்கவேண்டும். கறண்டிக்காம்பை அடுப்பில்போடுவோம். அது பழுக்கப்பழுக்கக் காய்கிறது. அது அடையும் விகாரங்களனேகங்களில் ஒன்றைப்பற்றி மாத்திரம் இப்போது கவனிப்போம். அதாவது, கரண்டிக்காம்பு கொஞ்சம் பெருக்கும். அது கண்ணுக்கு நன்ருகத் தெரியாது. ஒரு இரும்பு மோதிரத்தில் சரியாய்ப் போகும்படியான ஒரு இருப்புக் கோலிக்குண்டை யெடுத்துக் கொண்டு அந்தக்குண்டை மாத்திரம் அடுப்பில் போட்டுக் காய்ச்சுவோம். அதை ஒரு சாமணத்தால் பிடித்துக்கொண்டு இப்போது அந்தக்குண்டு மோதிரத்தில் முன்போல் சரியாய்ப் போகுமாவென்று பார்த்தால் போகாது. இதனல் என்ன விளங்குகிறதென்ருல் இருப்புக்குண்டு உஷ்ணப்பட்டதால் பருத்துவிட்டதென்பது விகசிதமாகிறது. உஷ்ணத்தினல் இரும்பு முதலிய கடின வஸ்துக்கள் மாத்திரமல்ல, தண்ணீரைப் போன்ற திரவ பதார்த்தங்களும் காற்றைப்போன்ற சூக்ஷ்ம பதார்த்தங்களும் உஷ்ணப்பட்டால் பருமனில் ஜாஸ்தியாகும்.

உருவம் பெருத்தால் என்ன உண்டாகும்? அது இலேசாக ஆகிவிடும். இரும்பைக்காட்டிலும் தங்கம் கனமென்று சொல்லுவார்கள். அப்படியென்ருலென்ன: இரும்பில் ஒருபலமும் தங்கத்திலொரு பலமும் எடுத்து நிறுத்தால் சரியாய்த் தானிருக்கும். இப்படியிருக்க கனம் லேசென்று எப்படிச் சொல்லுகிறது. ஒரு வீசை கத்திரிக்காய் வாங்குகிறோம். கத்திரிக்காயின் கனமும் ஒரு வீசைக் கல்லின் கனமும் சரியாயிருந்தும் கத்திரிக்காய் லேசல்லவா. வீசைக்கல் சிறிதாயிருக்கிறது. கத்திரிக்காயோ அதைப்போல் எவ்வளவோ மடங்கு பெரிதாயிருக்கிறது. ஒருகையில் ஒரு கத்திரிக்காயையும் இன்னெருகையில் அந்தக் கத்திரிக்கா யவ்வளவு பருமனுள்ள இரும்பையும் எடுத்துப் பார்த்தால் கத்திரிக்காய் வெகு லேசாகவும் இரும்பு அதிக கனமாகவுமிருக்கும். ஆகையால் இரண்டு வஸ்துக்களில் ஒன்று கனம், மற்றென்று இலேசு என்று சொல்லுவதின் தாற்பரியம் என்னவென்ருல் ஒரேபருமனுள்ளதாக இரண்டையும் எடுத்துக்கொண்டு பார்த்தால் எது கனமாகத்தெரிகிறதோ அதைக் கனமான வஸ்துவென்றும் மற்றென்றை இலேசான வஸ்துவென்றும் சொல்லுகிறோம். உஷ்ணப்படுவதால் காற்று பருக்குமென்று சொன்னேம். பருத்ததினல் பக்கத்திலுள்ள உஷ்ணப்படாத காற்றைக் காட்டிலும் லேசாக ஆகிவிடாதா? அது எப்படியென்று இன்னும் சற்றுப்பார்ப்போம்.

சூரிய உஷ்ணத்தால் பூமியானது சுட்டுப்போகிறது. அதற்குச் சுற்றியும் அதன்மேல் பட்டுக்கொண்டுமிருக்கிற ஒரு குன்றுமணிப் பருமனுள்ள காற்றைப்பற்றி மாத்திரம் பேசுவோம். அந்தக்குன்றுமணிக் காற்று தன்மேல் பூமியினுஷ்ணம் படுவதால் ஒன்றரைக் குன்றுமணிப் பருமனுவதாக நினைப்போம். இதற்கு மேலே உஷ்ணப்படாமலிருக்கும் குன்று

ம்ணிக்காற்றைக்காட்டிலும் இது லேசாகிவிடாது. கத்திரிக்காய்ப் பருமனையும் விசைக்கல் பருமனையும் யோஜித்துப் பார்த்துக்கொள்ளுவோம். இப்படியே ஒவ்வொரு குன்றுமணிக் காற்றுமாகும். இப்படி உஷ்ணப்பட்டதால் பூமிக்குச் சமீபத்திலுள்ள காற்றானது இலேசாகி மேலே கிளம்பிவிடும். காற்றானது எப்போதும் அசைந்து கொண்டிருப்பதால் லேசாயிருக்கும் காற்று அடியிலும் கனமாயிருக்கும் காற்றுமேலேயும் தங்கியிராது. ஒரு பாத்திரத்தில் தண்ணீரை வைத்து அதற்கடியில் ஒரு நெட்டியைப் போட்டால் அது அடியிலிருக்குமா? அடியிலமுக்கி வைத்தால்கூட கையை யெடுத்தவுடனே மேலே கிளம்பிவிடும். அது மேலே கிளம்பவும், அது இருந்தவிடத்திற்கு மேலேயிருந்த தண்ணீர் வந்துவிடும். இதை நாம் நேரில் பார்க்கமுடியும். காற்று மேலே போகிறதும் கீழேவருகிறதும் கண்ணுக்குத் தெரியாதாயினும் இவ்வாறு நடக்குமென்று நாம் ஊகிக்கிறதோடு ஒருவாறு பிரத்தியட்சமாகவும் காணலாம். ஒரு வெள்ளை ஸீஸாவில் கொஞ்சம் புகையையடைப்போம். காற்றென்றால் கண்ணுக்குத் தெரியாது. புகை கண்ணுக்குத் தெரியும். அந்த ஸீஸாவின் அடியில் சற்றே விளக்கைக் காட்டினால் அடியிலிருக்கிற புகை மேலே கிளம்பிவிடும். மேலேயிருக்கும் புகை கீழேவரும்.

ஆகையால் சூரியனுஷ்ணத்தினால் உஷ்ணப்படும் பூமிக்குச் சமீபத்திலிருக்கும் காற்றும் உஷ்ணப்பட்டு லேசாகி மேலே கிளம்பிப்போகும். அக்காலத்தில் சமுத்திரமானது பூமியைப்போல் அவ்வளவு உஷ்ணப்படுகிறதில்லையென்று கண்டோம். அதைச் சுற்றியிருக்கும் காற்றானது குளிர்ந்தும் பூமியைச் சுற்றியிருக்கும் காற்றைக்காட்டிலும் கனமாகவுமிருக்கும். பூமியை யொட்டியிருக்கும் காற்று மேலேபோனவுடனே அந்த விடத்திற்குக் கடலினின்று குளிர்ந்த காற்றுவருகிறது. இதுதான் பிற்பகலிலடிக்கும் கடற்காற்று.

தரைக்காற்று. பகலில் சுமார் பன்னிரண்டு மணிக்கு ஆரம்பிக்கும் கடற்காற்று சாயங்காலமெல்லா மடித்து இராத்திரியிலும் வெகு நாழிகை யடிக்கும். அதற்குப்பின் தரைக்காற்றுத் திரும்பும். பகலில் சூரியகிரணத்தால் பூமி காய்ந்து சூரியன் அஸ்தமனமாக பூமியின் கொதிப்புக் கொஞ்சம் கொஞ்சமாக நீங்குகிறதைப் பார்க்கிறோம். பகலில் தன்னிடத்திருந்த உஷ்ணத்தையெல்லாம் போக்கி ராத்திரியில் பூமி குளிர்ந்துபோய்விடுகிறது. சமுத்திர ஜலமுமப்படியே. ஆனால் பூமிக்கும் சமுத்திரத்திற்கும் ஒரு வித்தியாசமுண்டு. பூமி எப்படி சூரியக்கிரணங்களை வாங்கிக்கொண்டு ஜலத்தைக்காட்டிலும் சீக்கிரத்தில் உஷ்ணப்படுகிறதோ அவ்வாறே தன்னிடத்திலுள்ள காங்கையை சீக்கிரம் கொடுத்துவிட்டு தண்ணீரைக்காட்டிலும் சீக்கிரத்தில் குளிர்ந்துபோய்விடும். அது எப்படிப் போலென்றால் சிரமப்பட்டுப் பணத்தைச் சம்பாதிக்கிறவன் அந்தப் பணத்தை வாரியிறைத்துவிடாமல் மெதுவாகவே செலவுசெய்வான். சிரமமில்லாமல் சம்பாதிக்கிறவன் எவ்வளவு சீக்கிரத்தில் சம்பாதிக்கிறானோ அவ்வளவு சீக்கிரத்தில் இறைத்துவிட்டு மற்றவனைக்காட்டிலும் முதலில் பணக்காரனாயினும் கடைசியில் அவனைவிட ஏழையாய் விடுகிறான். அப்படிப்போல பூமி முற்பகலில் தண்ணீரைவிடச் சூடாகவிருந்தும் ராத்திரியாக ஆகத் தன் உஷ்ணத்தைச் சீக்கிரம் கொடுத்துவிட்டு சமுத்திர ஜலத்தைககாட்டிலும் குளிர்ந்துபோய்விடுகிறது. ஆகையால் கடற்காற்று ராத்திரியில், உஷ்ணம் உண்டாகும் நியாயப்படியே, சமுத்திரத்தை யொட்டியிருக்கும் காற்று உஷ்ணமாகவும் தரையையொட்டியிருக்கும் காற்று குளிர்ந்து மிருக்குமாதலால் சமுத்திரத்தைச் சேர்ந்த காற்று லேசாகிப் போய்விட அந்த இடத்திற்குத் தரையினின்றும் காற்று ஓடிவரும். நல்ல கோடைகாலத்தில் பூமி கொதித்து நன்றாக ஆறிக் குளிராதாதலால் அந்தக்காற்று உஷ்ணமாகவேயிருக்கும். கொதிக்குமபடியான மலையில் பட்டு வருமாயின் அதிகக் காங்கையாயிருக்கும். ஆகையால்தான் சென்னப்பட்டணம் முதலான சில ஊர்களில் மே, சூன் மாசத்தில் பகலில் 11-மணிவரையி லடிக்கும் தரைக்காற்று நெருப்பைப் போலிருக்கும். அந்தக்காற்று கொதித்துக் கொண்டிருக்கிற மலை, குன்றுகளிற் பட்டு வருவதால் நிரம்ப உஷ்ணமாய்வருகிறது.

*"It is not knowledge which moves the world but spiritual ideals and moral convictions."*

## ¶ "TO HIM WHO ROBBED ME OF ALL THAT'S MINE": A STUDY IN THREE ACTS.

† "வாரும் வாரும் துரையே இந்தவூர்தானுஅ உமக்குஉ?"

[*Vide* "*Three Words of Strength*" *or* "மூன்று மந்திரங்கள்" *in* "நாத-கீத நாமகள் சிலம்பொலி"]*

"விட்டுப்பிடி, செத்துப்பிழை, நேசித்திரு."

திருவிண்ணப்பம்—Invocation.

"பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படி பட்டநீ
மட்டுக்குமிஞ்சி மனங்கல்லாச் சமையலுற்றால்
எட்டுக்குமுள்ளே யிருந்தவரை யாட்டுவித்து
அட்டுண்டுவாழ்வார்க் கதியாவந் தாளாயோ!"

---

(முதல் அங்கம்): "சோரனைக்கண்டனம்": (Act I.)

"பண்டேபயில்தொறும் இன்றேபயில்தொறும் ஒளிக்குஞ்சோரனைக் கண்டனம்"

(2-வது அங்கம்): "பற்றுமின்": (Act II.)

"ஆர்மின், ஆர்மின், நாண்மலர்ப்பிணையில் தாள்தளையிடுமின்
"சுற்றுமின்! சூழ்மின்! தொடர்மின்! விடேன்மின்!—பற்றுமின்!"

(3-வது அங்கம்): "பிடித்தபத்து": (Act III.)

"ஆளுடைச்சுடரே! அளிந்ததோர்கனியே! பெருந்திறல் அருந்தவர்க்கரசே!
பொருளுடைக்கலையே! புகழ்ச்சியைக்கடந்தபோகமே! யோகத்தின் பொலிவே!
தெருளிடத்தடியார் சிந்தையுட்புகுந்த்அவர் உள்ளம்கவர் கள்வனே!
இருளிடத்துன்னைச் சிக்கெனப்பிடித்தேன்! எங்கெழுந் தருளுவதினியே!"

---

பியாக்-இராகம்.

ஆரோஹணம்: ஸரி கம பம பநி ஸா
அவரோஹணம்: ஸநி தப மக ரிஸ

(பல்லவி)

† "வாரும் வாரும் துரையே இந்தவூர்தானுஅ உமக்குஉ"?
வாரும் வாரும் ஆண்டியப்பதுரையே இந்தவூர்தானுஅ?

(அனுபல்லவி)

காப்புக்கொலுசு அட்டிகையொட்டியாணம் கண்கொள்ளா மங்கலஜோடிப்பு
காரைமுருகு நாகர்திருகுபூ சாவரன்கட்டி புதுச்சேரிக்கொலுசொடு
வேலங்காய்க்கொலுசும் வெள்ளிப்பாத்திரங் கிண்ணிகளுங் கொள்ளைகொண்டது
போதாதென்றுன்னிமே ஈயம்பித்தளை சாமானும்தூக்கிய துரையேஎ!
[வாரும் வாரும்—இந்தவூர்தானுஅ உமக்குஉ?

(சரணங்கள்)

1. அதுஇதுசெய்வேனென் றதிகாரதோரணை
சிதருமற்செப்பியே—சொன்னசொற்றவறுமற்

---

¶ *Compare*: "தபசிலன்னைவைத்துப்பூஜைசெய்!" and *Herbert Spencer*: "Devotion to science is a tacit worship—a tacit irecogniti on of worth in things studied; and by implication in their cause."

† (This refrain is taken from a song which is very largely and commonly sung by little brides during '*Nalangu*' on the occasion of their marriage.) இது ஒரு நலங்குப்பாட்டின் முதலடி. (பியாக்கு இராகம்.)

* The following are the footnotes to Three Words of Strength in "Lyrics and Lay-songs of Temple-Legends." (See next page.)

சூதுவாதும்செய்யாமற் சூக்ஷமமாய்வந்துள்ளேபூட்டையுடைத்து,
நான்பேசியபேச்செல்லாங் கேட்டுக்கொண் டேபொருள்வெளவிய துரையே!
[வாரும் வாரும்—இந்தஊர்தானா உமக்கு?

2. நகைபோச்சு நட்டுப்போச்சுப் பகைபோச்சுப் பணம்போச்சு
வகைவகையாப் பேசிநல்ல வாதுசெய்வார் ஊடல்போச்சு
[வாரும் வாரும் துரையே இந்தஊர்தானா உமக்கு?

3. வந்துள்ளேசோதித்துப் பெட்டிபேழையெலாந்திறந்து பார்த்துக்கந்தைத் துணிகழித்துச்
சந்துள்ளேபெட்டியை வைத்துத்திறந்தம்மா! நகைநட்டெல்லாமொன்றாய் வெளவியதுரையே
[வாரும் வாரும்—இந்தஊர்தானா உமக்கு?

4. நொந்துள்ளே பெண்டீர்மக்கள் நோகிறார்பறி கொடுத்தோமென்று
சந்துள்ளேவந்துநின்ற உன்விந்தையை உளமொன்றி யுணரமாட்டாமலே!
பொந்துள்ளேகைநீட்டிப் பக்குவமாய்ப் பறிமுதல் வாங்கிவைத்த
விந்தையையான் என்னென்று சொல்லுவேன் துரையேஎ!
[வாரும் வாரும்—இந்தஊர்தானா உமக்கு?

5. நாடுபோச்சு நகர்போச்சு மனைபோச்சு மகவும்போச்சு
வீடுபோமென் றுருட்டினாலும் மெய்விட்டுப் பொய்சொல்லேன் ‡
என்றனை அடிமைகொண்டு படுத்தினது போதாமல்
கன்றுஆவின் தலைகடிக்கக் கற்பித்தான் தேசமிது!
[வாரும் வாரும் துரையே இந்தஊர்தானா உமக்கு?

6. வீட்டின்கூறை மேலிருந்து வீழ்த்தினீரே கொல்வேனென்று
வீட்டின்முன் அசுவம்நிற்க அதைக்கொடுபோய்ப் பணம்பறித்தீர்
நாட்டிலேஜனமிருக்க நடுப்பகலிலேஉயிர் வாங்கத்தானும் உடன்பட்டீரே!
பூட்டிலேசாவியேறு தனைத்திறந்துவிந்தையாக நொந்தபுண்ணிற் கோலுமிட்ட துரையேஎ!
[வாரும் வாரும்—இந்தஊர்தானா உமக்கு?

---

ACT (1) These are the very words of the Heavenly Lancer—the Divine Policeman commissioned to preserve God's Peace : "Do good in return for evil. No one is under your protection. You and your family are alike under the wing of God. This is an opportunity to test your Patience (க்ஷமா) and Peacefulness (சாந்தி). It will be a disappointment to ME if you fail to stand the test. There is no such thing as abuse and insult. Borne patiently these things are honours."

ACT (2) Thus spake again in the Still Silence of the Soul the Divine Lancer (God's own Policeman bent on preserving God's Peace on Earth and Good Will among men,) investing *Servus Servorum Dei* with the sword of wisdom : "God has placed you as a shield (கவசம்) and protection (ரக்ஷா) to your 'neighbour.' (You must rise up and prove equal to the task.) You talk of *qualifying* and *modifying* and *compromise* with regard to *Principles* that are *Absolute*. You have not been harassed and annoyed sufficiently. Why should I interfere! Suffering is the *Leaven* which brings people up to the *Mark*. If they take the *Lesson* at once there is no suffering. They have not attained it and without the *means* they cannot achieve the *end*. Help and protect them by elevating them, not by satisfying the passions which are evil and which demand satisfaction."

ACT (3) In presenting again the *Divine Flag of Discrimination* (*Kukkuda-dhvajam*) and the mystic weapon which 'conquers the enemy'—*Kamastram* with the Armour of Light (*Vivekachintamani kavacham*) to *Servus Servorum Dei* the Lord of Hosts and *Teacher* of the Teacher, the Son of God, addressed himself to the soul in piteous cry of grievance merged, responding to its prayer "O Lord! save us from all evil!" thus:—"What is all this talk of grievance and rights and possession? There is no grievance that is not a benefit ; no right except to humility; and no possession that is due except truthfulness. ‡ Thus armed disarm your neighbour and uproot his hatred by your Love. Love thy neighbour as thy own self."

"Look at me! Give me thy heart! Adore me! Serve me! Cling in Faith and Love and Evermore to Me! So shalt thou come to me! I promise true for thou art sweet to me! And let go these rites and writ duties! Fly to Me alone! Make Me thy single refuge. I will free thy soul of all its sins. Be of good cheer!"—*Baghavad-Gita.*

---

‡ *Compare* Huxley : "If wife and child and name and fame were all to be lost to me one after the other as the penalty, still I would not lie."—*Letter to Charles Kingsley* (1860) *soon after the death of his first child.*

## CHILDREN'S PAGE.

### சிறுவர்க்கான பக்கம்.

### NOBILITY OF CHARACTER NOT DEPENDENT ON RACE OR CLAN.

உத்தமகுணம் ஜாதி இனத்தையே பொறுத்ததன்று.

ஓர் உண்மையான கதை.

வேம்பி னிலைபுட் கனியினும் வாழை தன்
தீஞ்சுவையாதுந் திரியாதாம்;—ஆங்கே
இனந்தீதெனினும் இயல்புடையார் கேண்மை
மனந்தீதாம் பக்கம் அரிது.

வேப்பிலைக்குள்வைத்துப் பழுக்கவைத்தாலும் வாழைப்பழம் அதனல் தன் தீஞ்சுவை சிறிதும் மாறாது; அதுபோல உத்தமகுணமுள்ளவர் எவ்வினத்தாராயினும் உத்தமகுணத்தாலே விளங்குவர்.

"ஒருகாலத்து அமெரிக்கருக்கும் மேலிந்தியருக்கும் நடந்த சண்டையில் அமெரிக்க சேனதிபதியின் இரண்டு பிள்ளைகள் எதிரிகளாகிய இந்தியருடைய கையில் சிறைபாணர்கள். அந்த இளஞ்சிறைகளை என்ன செய்யலாமென்று வெகு யோசனை நடந்தது. சில அமெரிக்கருக்குப் பழிவாங்கும் நிமித்தமாயும் மற்ற அமெரிக்கருக்கு ஒரு பயமுண்டாக்கும் படியாயும் அந்த இளஞ்சிறைகளை ஒரு மரத்தில் கட்டித் தொங்கவிட்டு அம்புகளை ஒவ்வொன்றாக அவர்கள்மேல் எய்து பிராணவதை செய்து கொன்றுவிடலாமென்று சிலர் யோசனைசொன்னர்கள். சிலர் எதிரிகளின் நல்ல நடக்கைக்கு அவர்களைப் பிணையாக வைத்துக் கொள்ளவேண்டும் என்றார்கள். ஆனல் அந்த இந்தியருக்குள் "வெண்மேகம்" என்று அருந்தங்கொள்ளும் பெயர்பெற்ற ஒரு வீரன், "அந்தச்சிறுவர்களை நானேபிடித்தேன்; அவர்களை என்னிடத்திலேயே ஒப்புவிக்கவேண்டும்" என்று சொல்ல, மற்ற இந்தியரும் அதற்கிசைந்து, அந்தச் சிறுவர்கள் அவன் வசத்திலேயே இருக்கவேண்டும் என்றும், உடனே அமெரிக்கருடைய சேனையை அப்புறப்படுத்தி இந்தியர்கேட்ட நிபந்தனைகளுக்கு இணங்காத பக்ஷத்தில் அவன் பிள்ளைகளிருவரும் கொலை செய்யப்படுவார்களென்று அவர்கள் தகப்பனுக்குச் சேதிசொல்லி அனுப்பவேண்டுமென்றும் தீர்மானித்தார்கள். சேனைத்தலைவனுக்குத் தூதுபோன மனிதன் திரும்பிவரக்கொஞ்சகாலம் சென்றபடியால் அதுவரையில் வெண்மேகம் என்னும் வீரன் அந்தப் பிள்ளைகளைத் தன்னுல்கூடியமட்டும் தயவாய் நடத்தி வந்தான். இது மற்ற இந்தியத் தலைவர்களுக்கெல்லாம் இஷ்டமாய் இராமையால் அவர்கள் அந்தக் குழந்தைகளைக் கடுகடுத்துப் பார்த்து வந்தார்கள்.

இந்தச் சிறு பிள்ளைகளுக்குத் தாங்கள் நிர்ப்பந்தமான ஸ்திதியில் இருந்த சங்கதி தெரியாதிருந்தாலும், மூத்தவனுன (Edgar) எட்கர் என்பவன் மாத்திரம் இந்தியவீரர்களின் முகக்குறிகளைப்பார்த்துத் தங்களுடைய அபாயமான ஸ்திதியை ஒருவாறு ஊகித்தான். வெண்மேகத்துக்குக் கொஞ்சம் இங்கிலீஷ் பேசத் தெரியுமாதலால், அந்தப் பிள்ளைகளை எப்போதும் ஆயுதபாணிகளாய் இந்தியர் காத்துக்கொண்டிருந்தபோதிலும், அவர்களை அடிக்கடி வெளியே அழைத்துக்கொண்டுபோவான். ஒரு நாள் அந்தத் தலைவன் அந்த ஊரிலுள்ள குதிரைகள் எல்லாவற்றிலும் அதிக வேகமுள்ளதென்று பேர்பெற்ற தன் குதிரைமேல் தானும் அந்தச் சிறுவர்களுமாக ஏறி அந்த இந்திய சேனைகளிருந்த கூடாரத்தைச்சுற்றிச் சவாரி செய்துக்கொண்டிருக்கையில் சிறுவர்களைப் பார்த்து, "குழந்தைகளே! இந்தக்குதிரையின் வேகத்தை நான் என்னவென்று சொல்லப் போகிறேன்; இதன்குணம் அதிகம் புகழத்தக்கது; மேலும் குறிப்பும் இதற்கு நன்றாய்த் தெரியும். இதன் வேகத்தால் நான் எத்தனை யோதரம் எதிரிகளிடத்தினின்றும் தப்பி உயிர் பிழைத்திருக்கிறேன்" என்று இவ்வாறு குதிரையின் குணங்களை அந்தப்பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொண்டிருக்கையில், கூடாரத்தில் ஒருவிதமான சந்தடியும் குழப்பமும் உண்டா

யிற்று. அதென்னவெனில், அமெரிக்க சேனைத் தலைவனுக்குத் தூதுபோயிருந்த மனுஷன் திரும்பிவந்ததனால் உண்டானது.

உடனே வெண்மேகம் மூத்தபிள்ளையைப் பார்த்து: "நீ குதிரைசவாரி பண்ணுவாயா?" என்ன, "எங்கள் தகப்பனார் கற்றுக்கொடுத்திருக்கிறார்" என்று அவன் மறுமொழி சொல்லவே, அவனைப்பார்த்து: "உங்கள் தகப்பனிடத்தில் போன மனுஷன் 'அவர் இந்தியர் சொன்ன நிபந்தனைகளைக் கேட்கமாட்டேன்' னென்று சொன்னதாகத் திரும்பி வந்துவிட்டான். இனி உங்களுக்கு மீட்சியில்லை. இந்தியர்கள் உடனே உங்களைக் கொன்றுவிடுவார்கள். நான் உங்களைக் காப்பாற்றக்கூடுமாவென்று பார்ப்போம். அதோ சிறிதுதூரத்தில் இருக்கிறதே அந்தத்தோப்பு! உனக்குத் தெரிகிறதா? அந்தத்தோப்பிலேதான் உங்கள் தகப்பனார் பாளயம் இறங்கியிருக்கிறார். நான் உங்களைக் கொஞ்சதூரம் குதிரைமேல் ஏற்றிக்கொண்டுபோய் உங்களைக் குதிரைமேல் விட்டுவிட்டு இறங்கிவிடுகிறேன். நீ உடனே குதிரையின் காதைப்பிடித்துக் கிள்ளினால் அது அதிக வேகமாய் ஓடும். அந்தத் தோப்பைநோக்கிக் குதிரையைச் செலுத்தினால் உன் தகப்பனாரிருப்பிடம் போய்ச்சேரலாம். ஆனால் கல்லடிக்குமாத்திரம் தப்பித்துக் கொள்ளவேண்டும்" என்றான். இவ்வண்ணம் வெண்மேகம் சொலக்கேட்ட மூத்தகுமாரன்: "உம்முடைய தபவேதயவு; நீர் எங்களை இப்படி விட்டுவிட்டால் இந்தியர் உம்முடைய உயிரை வாங்கமாட்டார்களா" என்ன, அதற்கு வெண்மேகம்: "நீங்கள் எனக்காகச் சிந்திக்கவேண்டாம்; எனக்கு 40 வயதாயிற்று; நீங்களோ சிறுவர்கள். இரண்டு பேரைக் காப்பாற்ற ஒரு உயிர்போனால் நிமித்தமில்லை. என்னுயிர் அவ்வளவு மேலானதல்ல" என்றான். இவ்வாறு வெண்மேகமும் சிறுவனும் பேசிக்கொண்டிருக்கையில் இந்திய போர்ச்சேவகர்களெல்லாம் அமெரிக்க சேனாதிபதியினிடமிருந்து சமாசாரம்கொண்டு வந்த மனுஷன்மேலேயே கியாபகமாய்ச் சிறுவர்களைக் கவனியாமல் இருந்தார்கள்.

இப்படி அவர்கள் அயர்ந்திருக்கிற தருணம் பார்த்து வெண்மேகம் குதிரையை விட்டுக் குதித்துப் பிள்ளைகளுக்குக் குதிரையை முடுக்கும்படிச் சமிக்கைபண்ணினான். மூத்தவனாகிய எட்கரின்நெஞ்சு படபடவென்று துடித்துக் கொண்டிருந்தாலும் அவன் உடனே குனிந்து குதிரையின் காதைப்பிடித்து நசுக்க, அது வாயுவேக மனோவேகமாய் ஓடி இந்தியர் என்னவென்று பார்த்து விழித்துக்கொள்வதற்கு முன்னே 100 கஜதூரம் போய்விட்டது. அப்போது அவர்கள், பின்னே தங்களைத் துரத்திக்கொண்டுவருகிற சப்தத்தையும் 'விர் விர்" என்று தங்கள் சமீபத்தில் வந்து விழுகிற பாணங்களின் ஓசையையும் கேட்டுப்பயந்து, மூத்தவன் இளயவனைநோக்கி "லயொனெல்! கெட்டியாய்ப் பிடித்துக்கொள், பின்னே அவர்கள் வருகிறார்களா பார்" என்று சொல்லவே, "லயொனெல் ஆம் அவர்கள் வருகிறார்கள், ஒரு பெருங்கூட்டம் அவர்களைப் பின்தொடர்ந்து வருகிறது. வெண்மேகந்தான் அவர்களை நடத்திவருகிறான்" என்ன, அதற்கு எட்கர்: "வெண்மேகம் ஒருக்காலும் நம்மை எதிர்க்க வாமாட்டான், இன்னும் யாரோ பார்" என்றான்.

அச்சமயத்தில் இவர்களைச் சுற்றி அம்புகள் சரமாரியாய்ப் பொழிய எட்கர் தானே திரும்பிப் பார்த்தபொழுது தம்பிசொன்னது சரியென்று காணப்பட்டது. இவர்களைத் தொடர்ந்து வந்தவர்களுக்குள் வெண்மேகம் அதிக சமீபத்துக்கு வந்துவிட்டான். அவன் சேணமில்லாத ஒரு குதிரைமேல் சவாரிசெய்து இந்தச் சிறுவர்களைக்கிட்டி இந்தியபாஷையில் பிள்ளைகளுக்குத் தெரியாமல் ஏதோ சிலவார்த்தைகள் சொல்லிக் கத்தினான். இப்படிப் பேசினது தன் எஜமானன் ஆபத்துக்காலத்தில் காட்டும்தூறி என்று அறிந்த அந்தக்குதிரை, இதுவரைக்கும் காற்றாய்ப் பறந்தால் இப்

போது மின்னலைப்போல் பாய்ந்தது. இப்படிச் சென்ற குதிரையின் வேகத்தால் பின்னேவருகிறவர்கள் இன்னார் என்று காணக்கூடாதபடி அவர்கள் அதிகதூரம் போய்விட்டார்கள். சிறிதுநேரத்தில் அவர்கள் அம்புகளுக்குத் தப்பி க்ஷேமமாய்த் தோப்பை அடைந்து, அங்கிருந்து ஒரு மலையிறக்கத்தில் அடித்திருந்த தங்கள் தகப்பனுருடைய கூடாரத்தை அன்றுசாயந்திரம் போய்ச்சேர்ந்தார்கள். இதுவரையில் பிள்ளைகள் இறந்துபோனதாக எண்ணியிருந்த தகப்பன் இவர்களைக்கண்டு கட்டித் தழுவிக்கொண்டு இப்படித்தன் குழந்தைகளைக் காப்பாற்றின இந்தியனை வாழ்த்தித் தன்னால் கூடுமானல் வெண்மேகத்துக்குத்தக்க பிரதியுபகாரம் செய்வதாகத் தீர்மானித்தான்.

ஆனல் அந்த இந்தியத்தலைவன் அப்படிக் கொத்த வெகுமானம் பெறும்வரையில் உயிரோடிருக்கவில்லை. எப்படியென்றுல் அப்பிள்ளைகளைத் தொடர்ந்துபோன இந்தியன் ஒருவன், வெண்மேகம் குதிரையுடன் பேசின வார்த்தைகளின் கருத்தைஅறிந்து அந்தப் பிள்ளைகள் தப்பித்துக்கொண்டு போனதற்கு இவன்தான் காரணமென்று கண்டு, அதிக கோபங்கொண்டு கையில் இருந்த அம்பை வெண்மேகத்தின்மேல் எறிய, அது அவன் மார்பில் பொத்திக்கொண்டு உருகிப்போக, வீரன் குதிரையில் இருந்து விழுந்து மடிந்தான். இப்படி அவன் குரூரமாய்க் கொலை செய்யப்படவே, உபகாரியாகிய அந்தத்தலைவனுக்கு ஒன்றும் பிரதியுபகாரம் செய்ய இடமில்லாமற் போயிற்றே என்று அமெரிக்க சேனதிபதி விசனப்பட்டு, வெண்மேகம் விழுந்து மரித்த இடத்தில் ஒரு கோரிகட்டி அதன்மேல் "சினேகிதனுக்காக உயிரைக் கொடுப்பதிலும் பேருதவி வேறொன்றுமில்லை" என்கிற வாக்கியத்தை எல்லாரும் பார்த்துப் புகழும்படிச் செதுக்கி வைத்தான்,

## HINDU IDEAL OF RIGHTEOUS RULE.

## 'செங்கோன்மை'.

'செங்கோன்மையாவது அரசனுற் செய்யப்படும் முறையினது தன்மை'. 'அந்த முறையானது ஒருபாற் கோணுது சமமாய் நிற்கும் செவ்விய தராசுக்கோல் போன்றிருத்தலின் செங்கோலென்பர்.

"ஓர்ந்துகண் ணோடாதிறைபுரிந்தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதேமுறை"

என்றார் பெரியாரும். தன்கீழ் வாழ்வார் யாவராயினும், உயிரிற் சிறந்த உயர்ந்தோராயினும் தாழ்ந்தோராயினும், வலியாராயினும் மெலியாராயினும், உற்றோராயினும் மற்றோராயினும் சமநிலையாகக் கருதி நடுவுநிலைமையாக, எந்தக்குற்றம் செய்தார்களோ அந்தக் குற்றத்துக்கேற்ற தண்டனையை அறிந்தோரிடமாராய்ந்து செய்வதே அதனிலக்கணமாம்.

"இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்."

என்று கூறிய திருவள்ளுவரது சிறிய உரையே அவ்வரசன் செய்யவேண்டுவனவும், அவன் அவற்றைச் செய்தலாலுண்டாகும் பயனும் என்பனவற்றையெல்லாங்கூறும். பருவகாலத்தில் பெய்து பயிரையும் உயிரையும் காக்கும் மழையைப்போல உலகத்தையெல்லாம் அரசன் காப்பான். அவன் தன் முறையினின்றும் விலகி நடக்க நேர்ந்தவிடத்தும் விலகாது தன் செங்கோன்மையைக் காத்து நடப்பதே அவ்வரசனைக் காக்கும் காவலாம். அங்ஙனம் விலக நேர்ந்தவிடத்தும் விலகாது முறைசெய்தாரிருவரை பரிமேலழகர் கூறியுள்ளார். அவர் வரலாறுகளை இங்குச் சிறிது சொல்லுவோம்.

மனுநீதிகண்ட சோழர் சரித்திரம்.

திருவாரூரில் குடிகட்கெல்லாம் கண்ணும் உயிரும்போல நீதிதவறாது அரசு செலுத்திவந்த மனுநீதிகண்டசோழர் என்பவரிருந்தனர்.

அவர் அரசு செலுத்திக்கொண்டு வருங்காலத்து அவருடைய புத்திரன் சேனைகளெல்லாம் தன்னைச் சூழ்ந்துவர தேர்மீதேறி ராஜவீதியில் உலாப்போயினன். போகும்போது ஒரு பசுக்கன்று துள்ளிக்கொண்டு போய் அந்தத் தேர்க்காலினடியிற் பட்டிறந்தது. அதுகண்ட தாய்ப்பசு சுழன்று ஓடிவந்து அலறிச்சோர்ந்து நின்றது. அதுகண்ட சோழபுத்திரன் அபாயம் வந்ததேயென்று மனதில் மிக்க துன்பங்கொண்டு அறிவழிந்து,

"மலர்தலை யுலகங்காக்கு மனுவெனுமெங்கோமானுக்
குலகிலிப்பழி வந்தெய்தப் பிறந்தவாறொருவன்"

என்று சொல்லிவீழ்ந்தனன். பின் நான் அறியாது செய்த இப்பாவத்துக்குப் பிராயச்சித்தம் உண்டாயின் தந்தையறிதற்குமுன்னே பிராமணர் விதித்தபடி அதைச்செய்யவேண்டுமென்று பிராமணரிடத்தே போயினன். கன்றையிழந்த அப்பசு துன்பம் சகிக்கமாட்டாது ராஜமாளிகை வாயிற் கட்டிய ஆராய்ச்சிமணியைத் தன்கொம்பினால் அடித்தது. அச்சப்தத்தைக் கேட்ட சோழர் சிங்காதனத்தினின்றும் உடனே இறங்கி விரைந்துவந்து வாயிலையடைந்து அங்கேநின்ற காவலாளர்களால் ஒரு பசு தன்கொம்பினால் அம்மணியை அசைத்ததென்றறிந்தனர். அங்கு வருத்தத்தோடு நின்ற பசுவைப்பார்த்து இதற்கு என்ன இடையூறு நேர்ந்தது என்று மந்திரிகளைப்பார்க்க அவர்களிலொருவன் "உம்முடைய புத்திரன் தேர்மீதேறி சேனைகள்சூழ ராஜவீதியிற் போகும்பொழுது ஒருபசுக்கன்று அத்தேர்க்காலிற் பட்டிறந்தது. அதன் தாயாகிய இப்பசு வந்து இம்மணியை யடித்தது" என்று விண்ணப்பம் செய்தனன். அது கேட்ட சோழர் பெருந்துயர்கொண்டு "என்செங்கோன்மை நன்று, இதுயாது செல்தால் தீரும்" என்றிரங்கி ஏங்கி அப்பசுவின் முகத்தைப்பார்த்துச் சோர்ந்தார். அதுகண்ட மந்திரிகள் இதற்குத் தாம் மனந்தளர்வது பரிகாரமாகாது. கோவதைக்கு தர்மநூல்களில் சொல்லிய பிராயச்சித்தத்தை நமது புத்திரனைக்கொண்டு செய்விப்பதே முடிவென்றார்கள். அதுகேட்ட அரசன் "நீங்கள் சொல்லும் பிராயச்சித்தம் இப்பசுவின் நோய்க்கு மருந்தாகுமா? என்பேரில் பரிவுகொண்டு நீங்கள் செப்பிய வார்த்தைக்கு நானிசைந்தால் நடுவுநிலைமை தவறாதா?

"மானிலங்கா வலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தா
லானமிக பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மா
லானபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ"

என்றபடி உயிர்களுக்குத் தன்னாலும், தன்பரிவாரத்தாலும், பகைவராலும், கள்வராலும் மற்ற உயிர்களாலும் வரக்கூடிய ஐந்து பயத்தையும் நீக்கி அவைகளைக் காப்போனன்றோ அரசனென்னப்படுவான். என் புத்திரன் செய்த கொலைக்கு பிராயச்சித்தம் செய்துவிட்டு வேறொருவன் செய்த கொலைக்குமாத்திரம் அவனைக் கொல்வேனாயின் ஆதிமனுவால் ஏற்பட்ட தர்மசாஸ்திரம் பின்மனு வென்னும் சோழனால் நீக்கப்பட்டது என்னும் பழி உலகத்தில் நிலைக்காதா?" என்றார்.

அப்பொழுது மந்திரிகள் "இதுபோல முன்னும் நடந்திருக்கின்றதே இதன் பொருட்டு புத்திரனைக் கொல்லல் முறையன்று. விதித்தபடி பிராயச்சித்தம் செய்தலே சான்றோர் வழக்கு" என்றார்கள்.

அதற்கவர் 'நீங்கள் நெறியினுண்மை யறியாது பேசுகின்றீர்கள். எந்த உலகத்திலே, எந்தப்பசு கன்றையிழந்த துன்பத்தினால் ஆராய்ச்சி மணியை அடித்தது? சொல்லுங்கள். இவனைக்கொல்வதே தகுதி. என்னால் இப்பசுவின் துயரை நீக்கமுடியாததலால் இப்பசு துன்பம் அடைதலைப்போல நானுமென் புத்திரனை யிழந்து துன்பமடைதலே நீதி' யென்றுசொல்லி எவ்விடத்தும், எக்காலத்தும், எவராலும் செய்தற்கரிய இச்செய்கையைச் செய்யத் துணிந்தார். துணிந்துசோழர் தம் புத்திரனை தாமேகொண்டு வீதியிற்போய் ஏகபுத்திரனே தங்குலத்துக்குள்ளானென்பதை நினைக்காது

தர்மவழியில் செல்லுதல் ஒன்றையே நினைத்து அவனைப் பூமியிற்கிடத்தி அவன் மார்பிலே தேர்ச்சக்கரம் செல்லும்படியாகத் தேரை நடத்தினர். உடனே கடவுள் அவர்க்குக் காக்ஷிதந்தருளி பசுக்கன்றையும் இராசகுமாரனையும் உயிர்ப்பித்தருளினர்.

பொற்கரப்பாண்டியன் சரித்திரம்.

பரிமேலழகர் கூறியமற்றொரு உதாரணம் வருமாறு:—"மதுரையிலரசுபுரிந்த பொற்கரப் பாண்டியன்.

"ஒற்றிற்றெரியா சிறைப்புறத்தோர்து மெனப்
பொற்றோள்துணையாத் தெரிதந்தும்"

என்றபடி, தானே மாறுவேடம் பூண்டு இரவில் சென்று விஷயங்களறிந்து வருவது வழக்கம். ஒருநாள் நடுராத்திரியில் போய்க்கொண்டிருக்கும்பொழுது ஒரு வீட்டில் ஆண் பெண் ஆகிய இருவர் பேசிக்கொண்டிருந்த சப்தம் கேட்டது. எல்லாரும் தூங்குமிச்சமயத்தில் இங்குமட்டும் அரவங்கேட்பானேன் என்றெண்ணி சமீபத்திற்போய் கேட்டுக்கொண்டிருந்தான். அப்போது அவ்வீட்டு அந்தணன் தான் போவதாயிருக்கும் யாத்திரையைப்பற்றி தன் மனைவியிடத்திற் சொல்லிக்கொண்டிருந்தான். அம்மனைவி 'நீங்கள் என்னைத் தனித்துவிட்டுபோய்விட்டால் எனக்குத்துணை யார்' என்று கேட்க அதற்கவன் 'அரசன் ஆணையிருக்கும்போது உனக்குப்பயமேது' என்று சொல்ல அவளும் சம்மதித்திருந்தனள். அப்போதரசன் 'இதென்ன! விபரீதம்! இவன் நம்மீது பாரத்தைப்போட்டுச் செல்லுகின்றானே' என்று நினைத்து அவ்வந்தணன் போனபின்னர் நாடோறும் இரவில் மாறுவேடம் பூண்டு அவ்விடத்தில் வெளியே சற்று நின்று சங்கதியறிந்து போய் விடுவான். அவ்வாறிருக்க யாத்திரைபோயிருந்த அந்தணன் திருமபிவிட்டான். அன்றிரவும் அரசன் வழக்கம்போல வீதியிற் செல்ல, அவ்வீட்டினுள் இருவர்பேசும் குரல்கேட்டது. கேட்கவே பிராமணன் தான் வந்துவிட்டானோ இல்லாவிட்டால் அவன் போனசமயம்பார்த்து வேறு எவனாவது புகுந்துவிட்டானோ என்று யோசித்து, அதை அறிய 'எப்படியிருக்கினும் நாம் கதவைத்தட்டுவோம். நாயகனுயிருந்தால் ஏனென்பான், அன்னியனுயிருந்தால் சும்மா இருப்பன். அப்போதறிந்துகொள்ளலாம்' என்று தீர்மானித்துக்கொண்டு கதவைத்தட்டினன்.

அப்பொழுது அவ்வந்தணன், "யாரது?" என்று கேட்கவே அந்தணன் வந்துவிட்டானென்று தீர்மானித்துக்கொண்டு அரசன் திரும்பிவிட்டான். கொஞ்சதூரம் வந்து அரசன் "இதென்ன நாம் செய்தகாரியம் விபரீதமாய் முடியுமே; நான் தட்டினதைக்கேட்டு தானில்லாத காலத்து வழக்கமாகவரும்சோர நாயகன் தன் வரவை யறியாது இன்னும் வந்து தட்டினனோ என்று நிரபராதியாகிய அப்பார்ப்பினியின்பேரில் சந்தேகங்கொள்வானே" என்று பயந்து அடுத்தாற்போலிருக்கும் வீடுகளையும் அவ்வாறே தட்டிச்செல்வோமானல் எவனோ கள்வன் வந்தானென்று நினைத்துவிடுவார்கள் என்று தீர்மானித்துக்கொண்டு அவ்வாறே செய்து விட்டுப்போயினன். விடிந்தவுடனே அந்தணர்களெல்லாம் ஒருங்குசேர்ந்து அரசனிடம் வந்து 'நம்மூரில் திருடர் பயம் அதிகரித்துவிட்டது; நேற்றிரவு எங்கள் வீட்டுக் கதவுகளைத் தட்டினார்கள்' என்று முறையிட அதற்கரசன் 'அப்படி யொருவன் வீட்டாரெண்ணத்துக்கு விரோதமாக இரவில் கதவை இடிப்பானேயாகில் அவனுக்கு என்ன தண்டனைசெய்வதென்று கேட்க, மந்திரிகள் 'அவன் கையைக்குறைத்துவிடுவதே முறை' என்றார்கள். உடனே அரசன் உடைவாளை உருவி தன்கையை வெட்டிக்கொண்டனன். பின் கடவுளருளால் அக்கரம் பொன்னிறமாக வளர்ந்துவிட்டது" என்பதே.

## நீதிபோதம்.

இச்செங்கோன்மையே அநாதியாகிய வேதம், அறம் என்பவைகளையும் நிலைநிறுத்துதற்கு இன்றியமையாத காரணமாயிருக்கின்றதனால் அவற்றிற்கு ஆதியென்று சொல்லப்படுவது. தான் உலகோம்புங்காலையில் தன் குடிகட்குக் குற்றஞ்செய்தாரை தண்டித்து ஒழித்தல் அவனது கடமையாம். அத்தண்டமாவது துன்பஞ்செய்தல், பொருட்கொள்ளுதல், கொல்லுதல் என்னு மிவை மூன்றுமேயாம். தன்கீழ்வாழ்வாரை தண்டித்தல் தர்மமல்லாததால் பழியன்றோ என்னின்; அப்படியல்ல; ஏனெனில் அப்படித்தண்டித்தல் அவன் தொழிலாகும். தண்டித்தலால் வரும்பயன் யாதென்றால் ஓர் முறை குற்றம் செய்தவன் மறுபடியும் அக்குற்றத்தைச் செய்யாமலிருக்கவும் குற்றஞ் செய்தவனொருவனைப் பார்த்து அவன் அயலாரும் அது செய்யாமலிருக்கவும் பண்ணுவதே. இதனுள் முதற்பயன் துன்பஞ்செய்தல், பொருட்கொள்ளுதல் என்னுமிரண்டினாலும் பெறப்படும். மூன்றாந்தண்டமாகிய கொல்லுதலினால் இரண்டாவது பிரயோசனமே பெறப்படும். அங்ஙனம் கொல்லுதலினால் வேந்தனுக்கு ஒரு பொழுதும் பாவம் வந்தெய்தாது. எப்படி பயிர்கள் களைக்கு அஞ்சி அழியுமோ, அதுபோல அரசன் குற்றம் செய்தாரை தண்டியாது விட்டால் உலகத்துள்ளார் பலதுன்பங்கட்குட்பட்டு வருந்துவராகலின் கொல்லுதலும் ராஜதர்மமே.

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்."

என்றார் பெரியாரும்.

---

"லால்குடி காக்ஷிசாலை 1916-ம் வருஷம் செப்டம்பா மாதம் 16-ம் தேதி காலையில் சென்னை சட்டநிரூபண சபையின் மெம்பராகிய கனம். சர். பி. எஸ். சிவசுவாமி ஐயரவர்களால் திருச்சிக்கோட்டை நேஷனல் ஹைஸ்கூலிலும், லால்ஹாலிலும், யுத்தசகாயநிதிக்காக, திறக்கப்பட்டு, 6-நாள் நடத்தப்படும். செப்டம்பர் மாதம் 10-ம் தேதி வரைக்கும் சாமான்களை திருச்சிக்கோட்டையிலுள்ள ஆர்கனைசருக்கு (Organizer) - அனுப்பலாம்."—திவானபஹதூர் டி. தேசிகாசார்யார், ப்ரெஸிடெண்டு.

## HINDU IDEAL OF "LIFE'S HELP - MEET."

"QUOTATIONS FROM STANDARD TAMIL WORKS."

### வாழ்க்கைத்துணைநலம்.



"மனைத்தக்கமாண்புடையளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

"மனைமாட்சி இல்லாள் கணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்."

"இல்லதெனில்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக்கடை."

இல்லறத்திற்குத்தகுந்த நற்குண நற்செய்கைகளையுடையவளாகித் தன்னை மணம்புரிந்த கணவன் வரவுக்குத்தக்க செலவு செய்பவள் தான் இல்வாழ்க்கைக்குத் துணையாவாள். மேற்கூறிய மனையாள் வாய்க்காவிடின், எச்சிறப்புடைத்தேனும், அவ்வில்வாழ்க்கை சிறப்புடைத்தன்று. மாட்சிமைதங்கிய மனையாள் வாய்க்கின் இல்லாததொன்றுளதோ. அஃதன்றேல் உள்ளதுதான் யாது. [1].

"பெண்ணிற்பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப்பெறின்."

ஒருவன் பெறக்கூடிய பெரும் பேறுகளுள், கறபென்னுங் கலங்கா நிலைமையுடைய மனையாளினும் சிறப்புடைத்து யாது.

"தெய்வந்தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யுமழை."

தெய்வம் எனக்கூறும் எதையும் வணங்காளாகி, உறங்கி எழிக்கவும், கணவனைத் தொழும் பெண்டிர் பெய்யென்று சொல்ல மழை பெய்யும். [2].

---

(1) அந்நற்குண நற்செய்கைகள் பின்வரும் செய்யுளான் விளங்குமே :—

அடிசிற்கினியாளே யன்புடையாளே
படிசொற்றவறாதபாவாய்—அடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியோ
வென்றூங்கு மென்கணிரா.—திருவள்ளுவர்.

(2) இவ்விடத்து நளாயனிசரித்திரம் அறியக்கூடியது.

"தற்காத்துத்தற்கொண்டாற் பேணித்தகைசான்ற
சொற்காத்துச்சோர்விலாள்பெண்."

தன்கணவன் கற்பு நிலையினின்று, தன்னை யுங்காத்து, அவனையும் காப்பாற்றி நற்குண நற்செய்கைகளை மறவாது புரிபவளே மனை யாள்.

"சிறைகாக்கும் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை."

கணவன் காக்கும் காவலென் செய்யும்! பெண்கள் தங்கள் கற்பினால் காக்கும் காவலே சிறந்தது. 'அறைகாத்தான் பெண்டிழந்தான்' என்பதும் அறியத்தக்கது. [1]

"பெற்றாற்பெறிற்பெறுவார்பெண்டிர்
பெருஞ்சிறப்புப் புத்தேளிர்வாழுமுலகு."

பெண்கள் கணவனை வணங்கிவந்தால் சுவர்க் கத்தில் தேவரால் வணங்கப்படும் பெருஞ் சிறப்படைவர். முற்கூறியபடி தெய்வமும் அவர்கள் வாய்ச்சொல்தட்டாது. [2]

"புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற்பீடுநடை."

'கற்புடையாள்' என்று உலகம் கூறும் கீர்த்தியை விரும்பா மனையாள் வாய்க்கின், அவருக்குப் பகைவர்முன் சிங்கம்போன்ற பெருமித நடையில்லை. [3]

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு."

மனைவியின் மாட்சிமைக் குணங்களை ஒரு வனுக்கு நன்மையென்றும், நன்மக்கள் பெறுதலை அந்நன்மைக்குப் பூஷணமென்றும் அறிந் தோர் கூறுவர். [4]

[வாழ்க்கைத்துணைநல விசேஷத்தைக் குறித்து நம்மனோர் இவ்வாறு கூறியிருக்கின்ற னர். ஆங்கிலேய கிரந்தகர்த்தாக்களில் ஒரு வராகிய வாஷிங்டன் இர்விங் என்பவர் மனை வியின் குணத்தைச் சிறப்பித்து தம்மவருள் தாமறிந்த உதாரணம் ஒன்றைக் கூறியெழுதி யிருக்கிறார். அதை நம்மவர் அறியவேண்டி அடுத்தாப்போல் தானே வரைந்திருக்கிறோம்.]

(1) சீதாபிராட்டியாரைக்காத்தது அவள் கற்புநிலை மையன்றோ.

(2) கண்ணகியைத் தெய்வமாய் லங்காபுரி, மதுரை, திருவாங்கூரில் கொண்டாடுவதற்கு இதன்றோ காரணம்.

(3) ஆங்கிலேயதேசத்து பூர்வீக அரசனாகிய ஆர் தர்-குவினிவீயர் கதை இதைவிளக்குகின்றது. (The Story of King Arthur & his Queen.)

(4) இதைச் சந்திரமதி சரித்திரம் புலப்படுத்தும்.

## Wife : A sketch from English Home-Life as drawn by Washington Irving.

## மனைவி.*

(ஒரு ஆங்கிலேய குடித்தனக்கதை.)

---

"உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா."

"பெண்ணின் பிரியத்தால் சூழப்பட்ட மனிதன் மனத்துள்ள சுகமும், சௌக்கியமும், ஆழ்கடலில் ஆழ்ந்துள்ள விலையற்ற முத்துக் கல் முதலியவைகளி லும் மிகவும் சிறந்தது. நான் இல்லம் அணுகும்பொழுதே அருள்வாடை வீசுகின்றதே. மணத்தில் எம் மணமுளது பார். ரோஜாப்பத்தியும் அவ்வளவு மண முடைத்தன்று"—என்றார் மிடில்டன். †

பெண்கள், ஒருவராலும் தாங்கக்கூடாத ஆபத்து விபத்துக்களை அதிகமான தைரியத் தோடு பொறுத்திருப்பதை நான் அநேகம் தடவை பார்த்திருக்கிறேன். மனிதனது ஊக் கத்தையழித்துத் தரையில் வீழ்த்தும்படியான துயரம் மெல்லியரின் முயற்சியைக் கிளப்பி மாக்ஷிமைப்படத்தக்க தீரத்தையும் மேன்மை யையும் உண்டுபண்ணுகின்றது. உயர்ந்தோங் கும்நாளில், சோர்வும் தளர்வும், சார்புமாயே யுள்ள, சிறுகொடுமையையும் கண்டு அஞ்சும். இனிமையும் மென்மையுமுள்ள ஒரு பெண் திடீரென்று மனோதைரியத்திலுயர்ந்து தன் கணவனைத் தேற்றி ஆதரித்து மிகவும் திட னுடன், வறுமையின் மிகுந்த இடுக்கண்களைப் பொறுக்கப் பார்ப்பது மிகவும் மனதை உருக் கத் தகுந்ததே.

தேக்குமரத்தைத் தன் அழகிய இலைகளால் சுற்றியிருக்கும் திராக்ஷக்கொடி, அவ்வுயர் மரம் இடியினால் பிளக்கப்பட்ட பொழுதும், தன் இளந்தளிர்களுடன் இன்னும் அதைத் தழுவிக்கொண்டு, அதன் ஒடிந்த கிளைகளைச் சேர்த்துக் கொண்டிருப்பதுபோல, சுகானுப வத்தில் கணவனுக்குப் பூஷணமாயிருந்து, திடீரென்று விபத்து சமபவிக்கும் நாளில் அவன் நொந்தமனதை ஆற்றி, தொங்கும்

* Translated from Washington Irving's Sketch Book.
† Middleton.

தலையைத்தாங்கி அவனுக்கு ஆறுதலும் உதவியுமாய் இருக்கும் பொருட்டன்றோ சுவாமி பெண்களைச் சிருஷ்டித்திருக்கின்றனர்.

"மனைவியும் குழந்தைகளும் உடையனாயிருத்தலைவிட மிகவும் நலமானகதி நான் உனக்கு விரும்பக் கூடியதன்று": ஆக்கம் வருநாளில் அதை உன்னுடன் அனுபவிக்கவோ, துக்கம் வருநாளில் உன்னை ஆற்றவோ அவர்களிருக்கிறார்கள்.

மணம்புரிந்தவன், துயரத்துள் வீழ்ந்தால், தன்னந்தனியா யிருப்பவனைவிடச் சீக்கிரத்தில் தன்னிலைமையைத் திருப்பி அடையக்கூடும். ஏனெனில் ஜீவனத்திற்கு அவனையே நம்பியிருக்கும், கதியற்ற பிரியமுற்ற பெண்சாதி பிள்ளைகளின் குறைகளினால் அவன் வேலைக்குத் தூண்டப்படுவான். இதன்றி இன்னும் முக்கியமாக ஒருசாதகமுமுண்டு. வெளியெல்லாம் மனம்நோக வுழைத்தாலும், சுயாதிபத்தியமுள்ள பிரியமான ஒரு சிறு உலகமாகிய தன் இல்லமுண்டு.— அதற்காகத் தன் மானத்தைக் காப்பாற்றவேணும் என்ற எண்ணம் தூண்டுதலினாலும், இல்வாழ்க்கையில் ஒருஆறுதல் காணலாம் என்ற எண்ணத்தினாலும் தன் நிலைமையைத் திருத்த முயலுவான்.

இவன்கதி இப்படியாக, தனிமையாயிருப்பவனோ அசாக்கிரதையாய் வீண்செலவில் விழ்ந்து, தன்னை எல்லோரும் கைவிட்டதாயும் தனக்கு வேறுகதியில்லை என்றும் நினைத்து குடியில்லாமல் பாழாய்க்கிடக்கும் வீடு இடிந்துவிழுவதுபோல மனமுடைந்து வீழ்ந்து விடுவான்.

இப்படி யோசிக்குங்கால் நான்நேரில் பார்த்த இருவர் இல்வாழ்க்கை என்ஞாபகத்துக்கு வருகின்றது. உயர்ந்த குடியிற்பிறந்து செல்வமாய் வளர்க்கப்பட்டவளான அழகுவாய்ந்த கற்றுத்தேறிய மெல்லிய மங்கையொருவளை என் அத்யந்தசிநேகனான லெஸ்லி மணம்புரிந்தான். அவளோ ஆஸ்தி யொன்றும் ஸ்ரீதனமாகக் கொண்டுவரவில்லை; ஆனாலும் என் சிநேகிதனிடத்திருந்த ஐசுவரியம் அவர்கள் எவ்வித சுகபோகங்களையும் அனுபவிக்கப் போதுமானதாயிருந்தது. அவளுக்குத் தான் எல்லா இந்திர போகங்களையும் அளிக்கக்கூடும் என்று எண்ணி எண்ணி ஆனந்தப்படுவான். 'அவள் ஸர்வபோகங்களையும் அனுபவித்து ஆனந்தித் திருக்கச் செய்வேன்' என்று சொல்வான்.

அவர்கள் சுபாவம் வெவ்வேறாயிருந்தும், அவ்வேற்றுமையே அவர்களை ஒத்திருக்கச் செய்தது. அவன் விசித்திரமான எண்ணங் கொண்டு எப்பொழுதும் ஒருமாதிரியாயிருப்பவன். அவளோ சிரிப்பும் உற்சாகமுமுள்ளவள். அவள் பத்துப்பேர் மத்தியிலிருக்கும் பொழுதும், அவள் கணவன் அவளையே, வாய் திறந்து ஆனந்தத்துடன் பார்த்துக்கொண்டிருப்பான். அவளைப் பலர் தெய்வமாகக்கொண்டாடும்பொழுதும் அவள் கண், அருளும், அங்கீகாரமும் லெஸ்லியிடத்துத்தான்பெற வேண்டு மென்றாற்போல, அவனிடத்தே செல்லும். அவன்கையில் அவள் சாய்ந்து கொண்டிருக்கும்பொழுது, அவள் மெல்லிய சரீரமும், அவன் உயர்ந்த ஆண்மை தங்கிய உடம்பும் வெகு நேர்த்தியாயிருந்தது. இல்வாழ்க்கை என்னும் பூம்பாதையில் மிகவும் சுகிருத்திருக்கக்கூடிய வகைகளுடன், இவ்விருவரைப்போல், வேறெவரும் நடக்கத் தொடங்கினார்களில்லை.

லெஸ்லி தன் ஆஸ்தியைக்கொண்டு பெரு வியாபாரம் செய்துவந்தனன். மணம்புரிந்து சிலமாதத்திற்கெல்லாம் திடீரென்று ஒன்றின் மேலொன்றாய் விபத்துக்கள் சம்பவிக்க, அவன் ஆஸ்திமுழுவதும் அழிந்து மிகவும் வறுமையுற்றான். கொஞ்சகாலம் இதை ஒருவரோடும் சொல்லாமல் வாடினவதனமும் உடைந்தநெஞ்சுமாய் உள்ளூற வருத்தப்பட்டு வந்தான். அவன் உயிரோ ஓயா வேதனையாயிருந்தது. அத்துக்கத்தை இன்னும் பொறுக்கமுடியாமற் செய்தது யாதெனில், தன் மனைவியிடத்து

அதைச் சொல்லத்துணிவு வராமையால் அவள் முன் நகைமுகம் காட்டி யிருக்கவேண்டி நேரிட்ட அவசியமேயாம். ஆனால் அவளோ, மிகவும் கூர்மைப்புத்தி யுள்ளவளாகையால் 'தன் கணவனுக்கு யாதோ துயரம் நேர்ந்திருக்கின்றது' என்றறிந்தாள். அவன் முகத்திலுண்டான வாட்டத்தையும் மனதிலுண்டான துக்கத்தையு மறிந்தாள். அவள் அசட்டுச்சிரிப்பினால் ஏமாந்துபோகக்கூடியவளன்று. அவள் தன்னால் இயன்றமட்டும் தன் உல்லாசத்தினாலும், இன்சொல்லாலும் ஹித வசனத்தாலும் தன்கணவனை உற்சாகப் படுத்தப் பார்த்தாள். ஆனால் அது அவன் துக்கத்தை அதிகப் படுத்தியதேயன்றி சாந்தப்படுத்தவில்லை. அப்பொழுதும் அவளிடத்து அவனுக்கு நேசம் அதிகரித்தது. அதிகரிக்கவும் அவளை சீக்கிரம் துர்ப்பாக்கியமுள்ளவளாக்குவோமே என்று எண்ணிஎண்ணி வாதனைப்பட்டான். இன்னும் சில க்ஷணம்தான்—அவள் இனியமுகத்தினின்றும் சிரிப்பு ஒழிந்து விடுமே!—அவள் குமுத வாயினின்றும் பாட்டு ஒழிந்துவிடுமே!—அவள் தாமரைக் கண்ணினின்றும் ஒளி நீங்கிவிடுமே!—உற்சாகமாய் உலாவும் அவளது உல்லாச மனம் இவ்வுலகத்துக் கவலைகளினாலும் துன்பத்தினாலும் மாறிவிடுமே!—என்று எண்ணி எண்ணி யேங்கினான்.

இப்படியிருக்க அவன் ஒருநாள் என்னிடத்துவந்து மிகுந்த துயரத்துடன் தன் நிலைமையைக் கூறினான். நான் முழுதும் கேட்ட பிறகு "உன் மனைவிக்கு இதெல்லாம் தெரியுமா" என்றேன். உடனே அவன் கண்ணும் கண்ணீருமாய் மிகுந்ததுயரத்துடன் "உனக்கு என்னிடத்து இரக்கமிருப்பின் அவள் பெயரைச் சொல்லாதே. அவளை நினைக்கவே வெறிபிடித்தவனாகிறேன்" என்றான். "ஏனப்பா, அவளுக்கு எப்படியாவது தெரியத்தானே போகிறது! நீ அதிகநாள் ஒளிக்கமுடியாது. நீ சொன்னால் உண்டாகும் துயரத்தைவிட, மிக்கத்துயரம் விளைக்கத்தக்கதாகத் திடீரென்று அவளுக்கு வேறு எப்படியாவது தெரியும்படி யாயிருக்கும். நீ சொல்லிடில் நலம். ஏனெனில் நேசிப்பவர்கள் வாய்ச்சொல் மிகக் கடுமையான சமாசாரத்தையும் கடுமை நீக்கி மிருதுவாக்கும். நீ அவளிடத்துச் சொல்லாமையால் அவளாலுண்டாகும் ஆறுதலை நீக்கிக் கொள்ளுகிறாய்—இன்னும் இருவர்மனதை ஒருமைப்படுத்தும் பாசத்தையும் விநாசப்படுத்துகிறாய். அப்பாசமாவது ஒருவர்க்கொருவர் கட்டுத்தடையின்றி திறந்த மனத்துடன் அவரவர் எண்ணுவதையும் நினைப்பதையும் ஒருவர்க்கொருவர் சொல்லிக் கொள்ளுவதே. 'ஏதோ உன்மனதை அரித்துக் கொண்டிருக்கிறது' என்று அவள் சீக்கிரம் அறிவள். இருவர் நிஜமாக நேசித்தால் ஒருவர் வெளிப்பார்வைக்கு மிகவும் அமைதியாயிருப்பது போலிருந்து தன் மனதிலுள்ளதை ஒளித்தலை மற்றொருவர் சகியார்: அதுவும் துக்கத்தைச் சொல்லாமல் மறைத்தாலோ, தன்னை அலக்ஷியம் செய்து அவநம்பிக்கையுடன் நடத்தியதாக நினைக்க இடமுண்டாகும்."—என்றுவிவரமாய்ப் புத்திசொன்னேன்.

"அவள் வெகு ஆனந்தத்துடன் எண்ணியிருப்பதையும், நோக்கியிருப்பதையும் நாசப்படுத்துவேனே. 'அவள் கணவன் தாரித்திரியமடைந்தான்' என்றுசொல்லி அவள் மனதைத் தரையில் வீழ்த்தப் போகிறேனே! உந்நத வாழ்வின் இன்பங்களையெல்லாம் அவள் இழக்கவேண்டுமே. நக்ஷத்திரகணத்து மத்தியில் பூர்ண சந்திரன்போல் விளங்கிக்கொண்டிருந்த அவள், வறுமைக்கு இலக்காகவேணுமே! அவள் அதை எப்படிப் பொறுப்பாள். அவள் செல்வத்தினாலேயே வளர்க்கப்பட்டாளே. எல்லாரும் அவளைத் தெய்வமாகக் கொண்டாடுகிறார்களே—இப்படியிருக்க, இவையெல்லாம் அவள் மனதைப் பிளக்குமே!—மனதைப்பிளக்குமே!"—என்று பலாபித்தழுதான்.

'அவன் ஆறாத்துக்கம் அழுகையின் நீங்கும்' என்று எண்ணி அவன் போக்குக்கு விட்டு

விட்டேன். அவன் அழுகை ஓய்ந்து தலையைத் தொங்கவிட்டு மௌனமாயிருக்கையில் அவன் நிலைமையை அவன் மனைவிக்குக் கூறும்படி மெதுவாய் வற்புறுத்தினேன். அவன் விசனத்துடன் 'அசத்தியம் ஆகட்டும்' என்றான் "நீ என்னமாய் அவளிடத்தினின்றும் மறைக்கமுடியும்? உன் நிலைமைக்குச்சரியாய் நீ குடித்தனம் செய்யும் விதத்தை மாற்றவேண்டாமா? மாற்ற அவளுக்குத் தெரியவேண்டியது அவசியமல்லவா!" என்று சொல்லவும், அவன் முகம் வாடியது. "நீ மனத்தொந்தரவு படாதே. நீ வெளி டம்பத்திலா உன் சுகானுபவமுழுவதையும் வைத்திருக்கிறாய்! நீ முன்னிருந்தபடி டம்பமாய் வசிக்காமற்போனாலும், அதற்காக உன்னைக் குறைவாய் எண்ணாத மிகவும் வேண்டிய சிநேகிதர்கள் சிலர் இருக்கிறார்கள். நிச்சயம் நீ உன் மனைவியுடன் சுகித்திருக்க அரண்மனை வேண்டுவதில்லையே". "ஒரு குடிசை போதும்!—நான் அவளுடன் அங்கேயும் சுகமாயிருப்பேன்! நான் அவளுடன் வறுமைக்கும் போவேன்!—மண்ணுக்கும் போவேன்! நான் எதுக்கும் அவளுடன்—அவளைபகவான் ரக்ஷிக்க! பகவான் ரக்ஷிக்க!" என மிகத்துயரத்துடன் விம்மிவிம்மி யழுது கூறினான்.

"நான் சொல்வதை நம்பு, நம்பு; நீ சொன்ன பிறகும் முன்னிருந்ததுபோல் தானிருப்பாள்; இன்னும் அதிகப் பிரியமாகக்கூட இருப்பாள். அவள் 'உன்னை, உனக்காகவே மணம் புரிந்தேன், செல்வத்திற்காக அன்று' என்று உனக்குத்தெரிவிக்க சமயம் வாய்த்ததே என்ற சந்தோஷத்தினல் கம்பீரமும் மேன்மையும் உற்றிருப்பாள். அவளிடத்து மறைந்திருக்கும் தீரத்தை உயர்த்தி உன்னிடத்துக் கூடின இரக்கத்தையும் உண்டுபண்ணும். ஒவ்வொரு பெண்ணினிடத்தும் ஒருவித தெய்வசக்தி உளது. அது ஆக்கம் வருநாளில் மறைந்து, துக்கம்வருநாளில் வெளியாகி மிகவும் பிரகாசிக்கும். தம் மனதுக்கு அருமையான பெண் சாதி இப்படிப்பட்டவளென்று அவளுடன் உலகத்திற் கடுந்துன்பங்களை அனுபவிக்கும் வரையில் ஒருவருக்குத் தெரிகிறதுமில்லை—வெளியாகிறதுமில்லை.—அவள் துக்கம்வரும் பொழுது தன் கணவனது குறைகளைத் தீர்த்து ஆறுதல்செய்யும் தேவதை போலிருக்கிறதும் தெரிகிறதில்லை."

நான் பேசினமாதிரியும் சொன்ன பேச்சும் அவன் மனதைக் கவர்ந்தது. கவர்ந்ததை அறிந்து "உன் துக்கத்தை அவளிடத்துப் போய் வெளியிட்டு ஆற்றிக்கொள்!" என்று மறுபடியும் தூண்டினேன்.

இம்மாதிரி நான் பேசியும் 'சொன்னல் என்னமாய் முடியுமோ' என்று கொஞ்சம் விசாரப்பட்டேன். இதுவரை இன்பத்திலேயே புரண்டாளே. அவள் மனோதைரியம் எப்படியிருக்குமோ. இருண்ட தாரித்திரிய வழி போகக் குழம்பி, அவ்வுல்லாச வழியை விடமாட்டேன் என்கிறாளோ! உயர்ந்த பதவியில் அழிவுநேரிட்டால் மற்றப் பதவிகளுக்கெல்லாம் இல்லாத துன்பங்களை உண்டுபண்ணி மனதை மிகப் புண்படுத்துகிறது.

ஆகையினல் மறுநாள்காலமே லெஸ்லியைக் கொஞ்சம் சந்தேகத்துடனே பார்த்தேன். அவன் அவளுக்கு எல்லாம் சொல்லிவிட்டதாகத் தெரிந்தது.

"அதை அவள் எப்படிப் பொறுத்தாள்?" என்றேன். "தேவதைபோல! அவளுக்கு ஒரு பாரம் நீங்கினாற்போலிருந்தது. பிறகு அவள் என்னைப்புல்லியணைத்து "உன்னைத் துன்பப்படுத்தியதெல்லாம் இதுதானா"என்று கேட்டாள், ஆனல் அவள் நிலைமையில் என்னமாறுதல் உண்டாகும் என்று அறியவில்லை. தாரித்திரியம் என்ற பெயர்தவிர அது இப்படிப்பட்டதென்று அறியாதவள். கணவனுடன் மனைவிகள் அனுபவித்ததாகக்கவிகள் வர்ணித்தெழு

தியிருக்கிற தாரித்திரியத்தைத்தவிர அவளுக்கு வேறுதெரியாது. அவள் துக்கப்படுவதாகத் தெரியவில்லை. அவள், வழக்கமா யனுபவித்த சௌக்கியங்களையும், சௌகரியங்களையும் இன்னும் குறைக்கவில்லை. சமுசாரதுக்கங்களையும் கவலைகளையும் உண்மையாக அனுபவிக்கும் பொழுதல்லவோ அவள் குணமெல்லாம் நிஜமாகவெளிப்படும்!'' என்றான்.

"அவளுக்குச் சொல்லியாய் விட்டது. பின் உலகுக்கு எவ்வளவு சீக்கிரம்தெரிவிக்கிறாயோ அவ்வளவுக்கவ்வளவு நலம். முதலில் வெளியிடும்பொழுது மனதுக்கு மிகவும் துக்கமாகத் தானிருக்கும். ஆனால் அது ஒரே துன்பம். அதுவும் சீக்கிரம் நீங்கிவிடும். அப்படி வெளியிடாவிடில், எப்பொழுது வெளியாய் விடுமோ என்று நாள்முழுதும் மனத் துன்பத்தினால் வருத்தப்படுவாய். ஒருமனிதன் மனதைத் தொந்தரவுப்படுத்துவது தாரித்திரியமல்ல! வெளிக்கு டம்பமாயிருக்கும் பாசாங்கே!—செருக்குக்கும் தாரித்திரியத்துக்குமுள்ள விருத்தமே!—ஒழித்துவிடவேண்டிய வெளிடம்பத்தில் இன்னும் பிரியம்வைத்துக் கொண்டிருப்பதே! வெளிக்கு ஏழைபோலிருக்கத்துணி! துணிவாயாகில் வறுமையின் கடுங்கொடுக்கை அறுத்துவிடுகிறாய்!'' நான் இப்படிச் சொல்ல லெஸ்லி சரியென்றான். அவனுக்கு வீண் செருக்குக் கிடையாது. அவன் மனைவியோ எப்பொழுது நம் புதுநிலைமைக்குத் தகுந்தபடி இருக்கப்போகிறோம் என்று ஆவலாயிருந்தாள்.

சிலநாட் கழிந்தபின் அவன் என்வீட்டுக்கு ஒருநாள் சாயங்காலம் வந்தான். அவன் தான் முன்னிருந்த மனையை விற்றுவிட்டு பட்டணத்துக்குக் கொஞ்சதூரத்தில் ஒரு கிராமத்தில் ஒரு சிறு குடிலிற்கு குடிப்போயிருப்பதாகச் சொன்னான்.

அவன் நாள்முழுதும் சாமான்களை வெளியே தூக்கி யனுப்புவதிலேயே முனைந்திருந்தான். அச்சிறுகுடிசைக்கு சில சாமான்கள் தான் வேண்டியிருந்தன. அவைகளும் வெகு சாதாரணமானவைகள். அவன் மனைவியின் வீணையைத்தவிர முன்வீட்டு நேர்த்தியான சாமான்களையெல்லாம் விற்றுவிட்டான். வீணையோ அவள் ஞாபகத்துடன் அதிகமாகச் சேர்ந்திருந்தது. அவர்கள் மணக்குமுன் நேசித்தகாலத்தைச் சேர்ந்ததாயிருந்தது. அவர்கள் ஒருவரையொருவர் நேசிக்குங்காலத்து அவ்வீணையின் சுரத்தோடிசைந்துபாடும் அவள் இனியகுரலைக் கேட்டுக்கொண்டிருக்கும் காலந்தான் அவனுக்கு மிகவும் ஆனந்தமான காலமாயிருந்தது. ஆகையினால்தான் அதை விற்கவில்லை என்றான்.

நாள்முழுதும் வீட்டுச்சாமான்களை வரிசைப்படுத்தி நேரிலே மேற்பார்வைபார்த்துக்கொண்டிருக்கும் அவன் மனைவியிருந்த குடிசைக்கு இப்பொழுது போய்க்கொண்டிருந்தான். எனக்கு அவர்களிடத்து அக்கறை பிறந்தபடியாலும், அந்திப்பொழுது நன்றாயிருந்தபடியாலும், நானும் கூடச்சென்றேன். அவன் மிகவும் தளர்வுற்றிருந்தபடியால், என்னவோ யோசித்துக்கொண்டேவந்தான்.

"ஐயோ மேரி!'' என்று துக்கத்துடன் பரிதாபித்தான். "அவளுக்கென்ன? ஏதாவது நேர்ந்ததா!'' என்றேன். "இந்நிலைமைக்கு வந்ததே போதாதா? இக்குடிசையில் மிகவும் இழிவான வேலைகள் செய்யவேண்டியதாயிருப்பது போதாதா?''

"இம்மாறுதல் அவளைமிகவும் வருத்தப்படுத்தியதோ''?

"வருத்தமா!—அவள் இனிமையும் நற்குணமும் ஒழிய வேறில்லை. அவள் முன்னிலும் அதிக உற்சாகமுடையவளாக இருக்கிறாள்.

அவள் என்னிடத்து முன்னிலும் அதிகப்பிரியமும், மேன்மையும், ஆதரவுமாயிருக்கிறாள்."

"மெச்சத்தக்கதே! நீ உன்னை ஏழையென்றுயே. நீ ஒருபொழுதும் இவ்வளவு செல்வவானாகவிருந்ததில்லை. அம்மாதினிடத்துள்ள அளவற்ற நற்குணக்குவியல் இதுவரை உனக்குத் தெரியவில்லை". என்றேன்.

"இப்பொழுது அக்குடிசையில் அவளை முதல் தடவை பார்ப்பது ஒழிந்தால் நான் அப்புறம் சௌக்கியமாயிருப்பேன். கஷ்டத்தை நேரிலனுபவிப்பது இன்றைக்குத்தான் முதல் நாள். அவளை இச்சிறு குடிசைக்கு இழுத்தாய்விட்டது. அவள் நாள்முழுதும் சாமான்களைச் சீர்திருத்துவதிலே முயன்றிருந்தாள். வீட்டுவேலையின் சிரமத்தை முதல் முதல் அனுபவிக்கிறாள். நேர்த்தியானவைகளும் சௌகிரியங்களுக்கு வேண்டியவைகளுமற்ற வீட்டை இதுதான் முதற்தடவை பார்க்கிறாள். இனி அனுபவிக்கப்போகிற வறுமையை யோசித்துயோசித்துவாடியிருக்கின்றனளோ!' என்று அச்சமுற்று ஏங்கிடந்தான்.

'இவைகளெல்லாம் நிஜமாயிருக்கலாம்.' என்று எண்ணி வாய்மூடிப் பேசாமலிருந்தேன்.

பெரியவீதியினின்றும் பிரிந்து ஒப்புறவாயுள்ள ஒருநெருக்கமான சந்துக்குள் நுழையவும் அந்தக் குடிசையைப் பார்த்தோம். அது பார்வைக்குமிகவும் தாழ்மையாயிருந்தது. ஆனால் அது பார்வைக்கு மிகவும் மனோரம்மியமாயிருந்தது. இலைகள் நிறைந்த திராக்ஷக்கொடி ஒருமூலையில் படர்ந்திருந்தது. அழகாய்ச் சில மரக்கொம்புகள் அதன்மேல் வளைந்திருந்தன. வாசற்கதவுக்கருகேயும் முன்னிலையிலேயும் வெகு அழகாய் அநேகபூச்செடித்தொட்டிகள் வரிசையாய் வைக்கப்பட்டிருந்தன. நாங்கள் அதை அணுகவும் கீதசப்தம் காதில் விழுந்தது.—லெஸ்லி உடனே என் கையைப் பிடித்துக்கொண்டான். நாங்கள் கொஞ்சம் நின்றுகேட்டோம். தன்கணவன் மனதுக்கு மிகவும் இசைந்த ஒருசிறுபாட்டை வெகுநேர்மையுடன் பாடிக்கொண்டிருந்தாள்.

லெஸ்லி கை நடுக்குற்றது. அக்கீதத்தை செவ்வையாய்க்கேட்க முன்சென்றான். செல்லவும் சப்தம் கேட்டது. உடனே மிகவுமழகிய ஒருமுகம் ஜென்னலில் தோன்றி மறைந்தது; உடனே ஒரு மிருதுவான காலடிசப்தம் கேட்டது. மேரி எங்களை எதிர்கொள்ள வெளியே வந்தாள். அவள் முழுவெள்ளை உடுப்புத் தரித்திருந்தாள். அவள் நேர்த்தியான கூந்தலில் புஷ்பம் சூட்டப்பட்டிருந்தது. அவள் முகத்திற் புதிதாய் ஒரு மலர்ச்சி உண்டாயிருந்தது. —சிரிப்பும் நிறைந்திருந்தது.— அவள் இதற்குமுன் அவ்வளவு அழகாய்த் தோன்றியதேயில்லை.

"என்பிரியமுள்ள ஜார்ஜே † உன்னைப்பார்க்க மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. நீ எப்பொழுது வரப்போகிறாயென்று சந்துவழியெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தேன். நான் உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன். குடிசைக்குப் பின் ஒரு அழகிய மரத்தடியில் சாப்பாட்டுக்கு மேசைபோட்டு அதன்மேல் சாப்பாடு வைத்திருக்கிறேன். மிகவும் நேர்த்தியான 'ஸ்ட்ராபெரி'ப்பழங்கள் சேகரித்து வைத்திருக்கிறேன். உனக்கு அதில் மிகப் பிரியமல்லவா!—நேர்த்தியான பாலாடைவைத்திருக்கிறேன். இவ்விடத்தில் எல்லாம் நேர்த்தியாயும், நிசப்தமாயும் இருக்கின்றது. ஓ! நாம் மிகவும் சுகமாயிருக்கலாம்!" என்று அவன் கையைபிடித்துக்கொண்டு முகத்தைப்பார்த்து முகமலர்ச்சியுடன் கூறினாள்.

லெஸ்லியோ ஆனந்த பரவசமடைந்து அவளை இறுகப்புல்லி முத்தமேல் முத்தமிட்டான். அவனால் பேசமுடியவில்லை. கண்ணினின்றும் ஆனந்த நீர்ப்பெருக்கோடியது. பிறகு அவன் நல்லஸ்திதி அடைந்தபொழுது, இக்காலத்தில் தான் அனுபவித்த சுகத்திற்கு பின் எக்காலத்து சுகமும் ஈடாகாது என்று அடிக்கடி கூறுவதுண்டு.

† ஆங்கிலருள் ஸ்ரீபுமான்கள் ஒருவரையொருவர் பேர் சொல்லியழைப்பது அவர்கள் ஜாதிவழக்கம். புருஷன் பெண்சாதி ஒருவரையொருவர் பேர்சொல்லிக்கூப்பிடக் கூடாதென்கிற வழக்கம் அவர்களிடத்தில்லை. இங்கே புருஷன்பேர் ஜார்ஜ் லெஸ்லி, மனைவியின்பேர் மேரி லெஸ்லி.

## EASY LESSONS IN ECONOMICS.
## WHAT IS WEALTH?
## செல்வ நூல் விளக்கம்.
## செல்வமென்றால் என்ன?

### அன்னவஸ்திராதிகள்.

THE NECESSARIES OF LIFE AND LUXURIES.

---

மானிடர்களனுபவிக்கும் சௌக்கியாதிகளுக்குக் காரணபூதங்களான பதார்த்தங்கள் பலவுள. உயர்ந்த அந்தஸ்தில் உள்ள ஒருவனுக்கு வேண்டியவைகள் பலவாயினும், ஒவ்வொரு ஜீவனும் உயிருடன்பிழைத்துவாழ முக்கியாபீஷ்டமான பொருள்கள் சிலவே. அவை அன்னவஸ்திராதிகள். இவைகள் கையேறினதின்பேரில்தான் மற்றைய அலங்காரார்த்தமானவிஷயங்கள் வேண்டியிருக்கின்றன. இப்படியே படிப்படியாக கீழில் உள்ள ஆசைகள் தீரத்தீர மேன்மேலான ஆசைகள் உதித்து அவ்வவ்வாசைகளைப் பூர்த்திசெய்ய பற்பல வியாபாரங்களில் மனிதன் உழைக்கவாரம்பிக்கிறான். ஆகையால் மனிதன் உழைப்பதற்கு ஆசையே காரணம். ஆகவே மனித வாழ்க்கையை ஆராய்ந்து நோக்குங்கால் நாம் அறிவதென்னவெனில், படிப்படியாகப் பல ஆசைகளும், அவ்வாசாபூர்த்தியின்பொருட்டு ஏற்படும் பலமுயற்சிகளும், அம்முயற்சிகளால் பிரசமிக்கப்பட்ட காமங்களின்மீது துஷ்பூரமாகக் கிளம்பும் வேறு பல காம்யங்களும் மனிதஜன்மத்திற்கு சுபாவமாயுள்ளன என்பதுதான். இது தான் சாமானிய மனித தருமம். பலபெயர்கள் ஆசையை அடக்கிப் பேரின்பந்தேடி நடக்கிறார்கள். அவர்கள் நடவடிக்கைகளைப்பற்றிக் கொஞ்சமேனும் நாம் குறைத்துப்பேசுவதில்லை. சாமானிய மனிதன் நடத்தைதான் சரியென்று நாம் பூஷிக்கிறதும் இல்லை. உலகவியற்கையைப்பற்றிப் பேசுவது நமது எண்ணமேயொழிய இது நல்லது பொல்லாதென்கிற விஷயம் நமக்கு இப்போது பிரகிரதமல்ல. ஆகையால், பெரும்பான்மையாக ஜனசங்காதங்களைப்பற்றிப் பேசும்போது, சாமானிய மானிடத்தன்மையைத்தான் அங்கீகாரம் செய்துகொண்டு அதனால் உண்டாகும் பலாபலன்களைப்பற்றி விவரிக்கவேண்டியதேயொழிய மனிதர்கள் இப்படித்தான் நடக்கவேண்டியது என்று தரும சாஸ்திரம் விதிப்பது நமது காரியமல்ல.

### மனிதர்களது இச்சாசக்தி.

"THE WILL-POWER."

இந்தலோகத்தில் பலவித சக்திகள் இருக்கின்றன. அவைகளால் நன்மையும் நேரிடும், தீமையும் நேரிடும். ஆனால் அவைகளைச்சரியான வழியில் உபயோகித்தால் தீமையை நீக்கி கூடுமானமட்டும் நன்மையை விளைக்கலாம். எப்படியெனில் ஏராளமாய் மழைபெய்து பெருகும் ஆற்றின்ஜலம், தோட்டம் துரவுகளை மூழ்கச்செய்து ஜனங்களுக்குப் பலவித ஹிம்சைகளைச் செய்யத்தக்கதாயினும் அதை நேரானபடி ஏரி குளங்களில் தேக்கி சீரான கால்வாய் அணைக்கட்டு மூலமாய் உலகத்திற்கு நன்மையுண்டுபண்ணச்செய்யலாம். அப்படியே இயற்கையான சக்திகளில் ஒன்றாகும் மனிதர்களது இச்சாசக்தி. அதனைநேரில் உபயோகிப்பதால் பலவிதமான போக போக்கியங்கள் பெருகும். ஆதலால் அச்சக்தியின் சுபாவத்தை நாம் நன்றாக அறியவேண்டியது.

### செல்வப்பொருள்கள்.

"ECONOMIC "WEALTH."

இப்போது, ஜனங்களுக்கு சந்தோஷபலிதமான எல்லாப்பொருள்களைப் பற்றியும் நாம் பேசுவதில்லை. தேகதாட்டியம், ஆரோக்கியம், மனதின்சாந்தி, சௌகுண்ணியம் பந்துமித்திரர்களின் பிரேமை முதலிய பலபொருள்கள்

மனிதசந்தோஷத்தைக் கொடுக்க அத்தியாவசியமானவை. ஆனால் அவைகளைப்பற்றி இச்செல்வநூல் உரைப்பது ஒன்றுமில்லை. இந்த சாஸ்திரத்தின் விஷயம் யாதெனில், சந்தோஷபலிதமான பொருள்களில் எவைகளுக்குச் செல்வம் எனப் பெயர் வழங்கிவருகிறதோ அவ்வதான்.

அவற்றின் மூன்று இலக்ஷணங்கள்.
THREE CHARACTERESTICS OF "WEALTH."

இப்படிக்குச் சாஸ்திரவிஷயமான செல்வத்திற்கு முக்கியமான இலக்ஷணங்கள் மூன்றுள.

முதலாவது:— *கிரயவிக்கிரயாருகதை. இதனால் நாம் அறிவது என்னவெனில் எந்தப் பொருளுக்கு ஒருவர் கையினின்றும் மற்றவர் கைக்கு முழுதாயாவது, பாகம் செய்யப்பட்டாவது, சங்கிரமணம் செய்யச் சீலமுண்டோ அதற்குத்தான் செல்வமென்ற பெயர் கொடுக்கப்படும். இப்படி சங்கிரமிக்கச் செய்யப்படக் கூடாதவைகள் பலவுண்டு. அவைகள் செல்வமென்று அழைக்கப்படமாட்டா. ஒருவனுடைய சாமர்த்தியம், பலம் முதலியகுணங்கள் செல்வமாகமாட்டா. ஆனால் அவைகளைக் கொஞ்சகாலம் பிறருக்காக உபயோகப்படுத்தலாம். அப்போது அவைகளின் உபயோகம் செல்வத்தின் முதல் இலக்ஷணத்தை உடையவை யாகலாம்.

இரண்டாவது:—†பாகுள்யராரித்தியம்? அல்லது ஏராளமாய்க் கிடைக்கமாட்டாமை. எந்த வஸ்து ஏராளமாய்க் கிடைக்கக்கூடுமோ அது எவ்வளவு உபயோகமுள்ளதாயினும் செல்வமாகாது. எப்படியெனில், நாம் உட்கொள்ளும் காற்று நம் ஜீவனைத்தரிக்க முதல் கருவியாயிருக்கிறது; ஆயினும் அது ஏராளமாய்க் கிடைப்பதால் செல்வமல்ல. அப்படியே தான் ஜலத்தின் விஷயத்திலும். ஆனால் சிலகாலங்களில், சிலவிடங்களில் இவைகள் ஏராளமாய்க் கிட்டாமையால் இவைகளுக்கு விலையேற்படும். அப்போது இவைகள் செல்வம்தான்.

மூன்றாவது:—முக்கியமாய் பதார்த்தங்கள் உபயோகமுள்ளனவையாக விருத்தல்வேண்டும். உபயோகம் என்றால்மனிதனுக்கு துக்கத்தைப்போக்கி சுகத்தைக்கொடுத்து ஆசையைத்தீர்க்கும் குணம். இது இருந்தால்தான் ஒருபொருளுக்குச் செல்வம் எனப்பெயர் பிறக்கும். ஆகையால் இதே முதல் இலக்ஷணம். ஆனால் உபயோகம்மாத்திரம் போதாது. காற்றும், ஜலமும் எவ்வளவு உபயோகமுள்ளவையாயினும் ஏராளமாயிருத்தலால் வேண்டிய பொழுது எத்துணைவேண்டுமோ அத்துணை கிடைக்கும். ஆகையால் அவைகளைச் சேகரிக்கவும், காப்பாற்றவும் சாமானியமாக யாதொரு பிரயாசமும் வேண்டியதில்லை. ஆகவே அவைகளுக்கு விலை ஏற்படுகிறதில்லை. இப்போது நாம் மொத்தமாய் அறிவது என்னவெனில், எந்தெந்த பதார்த்தங்கள் மனிதனுக்கு துக்கத்தைப்போக்கி சுகத்தை உண்டுபண்ணுவதினால் உபயோகமாகிறதுடன், அவை ஏராளமாயிராமவிருத்தலினால், சேகரிக்கவும் காப்பாற்றவும் பலவிதமான பிரயாசம் வேண்டியிருந்து, பலபெயர் கைம்மாற்றுக்கிடமாகிச் சமானமான வேறு பதார்த்தங்களைச் சம்பாதிக்கக் கூடியவையோ அவைகளுக்குத்தான்செல்வம் என்று இச்சாஸ்திரத்தில் வழங்கும் பரிபாஷை. வாக (Walker) என்னும் செல்வநூலாளர் கூறியபடி, செல்வமென்பது 'குணி', விலையென்பது 'குணம்.' அவைகள் பரஸ்பரம் வேறுபட்டு நிற்கமாட்டாதவை. எப்படி பதார்த்தமும் அதன் குணமும் ஒருங்கக்கூடியவையோ அப்படியே தான் செல்வமும் விலையும்.

* The quality of being transferred.
† Limited Supply.

## MUTUAL DEPENDENCIES OF MEN IN ORGANISED SOCIETIES.

## ஜனசங்காதங்களது பரஸ்பர அபேக்ஷை.

"சமஷ்டிஜீவன்."

"SOCIAL BEING."

ஒரு நாட்டின்கண் வாழும் ஜனங்கள் பரஸ்பராபேக்ஷை யுள்ளவர்களாக விருக்கிறார்கள். ஒவ்வொருவரும் மற்றவரின் சகாயத்தின் மீது சார்ந்தே ஜீவிக்கிறார்கள். சிறிது ஆலோசித்துப் பார்த்தால் நம்முடைய சுகதுக்கங்களுக்கு எவ்வளவு பிறர் காரணபூதர்களாகிறார்கள் என்று நன்குவிளங்கும். நாம் பிறர் உதவி கிஞ்சித்தேனும் இல்லாமலே ஜீவிப்போம் என்று சங்கல்பம் செய்துகொண்டு அதன்படி நடக்கமுயன்றால் மூன்றுநாள்கூடப் பிழைத்துக் கடைத்தேறமாட்டோம்.

"உதாரணம்."

"ILLUSTRATION."

நாம் உடுத்தும் துணியை எடுத்துக்கொள்வோம். அது நம்மானத்தைக் காக்கவும் குளிருக்குப் போர்க்கவும் உதவி, நம்மேல் உல்லாஸமாய்வந்து அமைவதற்குமுன் எவ்வளவு வேலைக்காரர்கள் கைப்பாட்டிற்கு இலக்காயிருக்கவேண்டும்.

"நாம் உடுத்தும்துணி."

"THE CLOTH WE WEAR."

முதல் முதல், காலாகாலத்தில் பருத்திபோட்ட குடியானவனை நாம் கணக்கில்சேர்க்கவேண்டியது. திருநெல்வேலி, பல்லாரி, கடப்பை, கோயமுத்தூர் முதலிய தேசத்தவரான கவுண்டனும், கவுடனும், வடுகனும் பாடுபட்டுப் பருத்திபோட்டுக் காவலிருந்து அது வெடிக்கும் தருவாயில் தனது குடும்பசகிதமாக சிறுமிகளும் கிழவிகளும் ஒருங்ககூடி அந்த வெடித்த பருத்திகளை யெடுக்கவேண்டும். பிறகு அச்சமயத்தில் இத்தேசத்திலும் மறுதேசங்களிலும் உள்ள யந்திரசாலைக்காரர்களுக்காக, அச்சாரம் கொடுத்துக் காத்திருக்கும சில்லரை வியாபாரிகள் சேர்ந்து வண்டிவண்டியாய் பட்டணங்களுக்குக் கொண்டுபோக, அங்கு ராட்டைகளில் அகப்பட்டு கொட்டை வேறு பஞ்சுவேறாகப் பிரிக்கப்பட்டு கட்டியான மூட்டை, மூட்டைகளாகக் கட்டப்பட்டு வெவ்வேறு ஊர்களுக்கு அனுப்பப்படுகிறது.

பிறகு வேறு சிலயந்திரங்களிடம் அகப்பட்டு விதம் விதம் திடமுள்ள நூல்களாக ஆக்கப்பட்டு, மற்றும் சில இடங்களுக்குச் செல்கிறது. அங்கே அந்நூற்கட்டுகள் சாயம் போடப்பட்டு பலவிதத்துணிகளாக நெய்யப்படுகின்றன. இப்படி அந்தத்துணி ஆவதற்குள் எவ்வளவு வேலைப்பாடு படவேண்டியிருக்கிறது! எவ்வளவு கூலியாள், எத்தனை எஜமான்கள், எந்தெந்த வர்த்தகர் வேண்டிய தோ அதைக் கணக்கிட்டு முடியாது.

"உழைப்பின் சமஷ்டி லக்ஷணம்."

"SOCIAL SERVICE"—A NECESSITY.

இப்படியேதான் நாம் உண்டு உடுத்து ஆண்டு அனுபவிக்கும் ஒவ்வொரு பதார்த்தமும நமக்கு உபயோகமாகுவதற்குள் வெகுவான ஜனங்கள் கையுதவி வேண்டுகின்றன. நாம் விளக்குப்பற்றவிடும் தீக்குச்சி பதினையாயிரம மயில்களுக்கு அப்பால் உள்ள நார்வே என்னும் தேசத்திலிருந்து வருகிறது. ஆகவே நாம் எல்லோரும், (இந்நாட்டில்வாழும் ஜனங்கள்மாத்திரம் அல்ல, இவ்வுலகம் முழுதும் வாழும் ஜனங்கள் எல்லாரும்) பிறருடைய அபேக்ஷையில்லாமல் தம்மட்டில் தம்மையே சார்ந்தவராகவில்லை.

"ஒன்றே குலமும்"

"THE HUMAN FAMILY"

இப்பூமியில் வாழும் எல்லாரும், ஊகித்துப் பார்த்தால், ஒரு குடும்பஸ்தர் மாதிரி கலந்து சுகதுக்கங்களுக்கு பாத்தியப் பட்டிருக்கிறார்கள். ஒருமலையாவதற்கு எப்படி சிறுசிலாசகலங்கள் இன்றியமையாதவையோ, எப்படி ஒருபிராணியாக, உடம்பின் உறுப்புகள் இன்றியமையாதவைகளோ, அப்படியே உலகத்தில் வாழும் ஒவ்வொருவனும், இராச்சியத்தின்தேகத்தைப் புஷ்டிகரிக்க ஏற்படுத்தப்

பட்ட ஒருபாகம் என்று நாம் கொள்ளவேண்டியது.

"அயோக்கிய : புருஷோநாஸ்தி."

"NO MAN USELESS AND NONE DISQUALIFIED"

இதற்கிணங்கவே சுக்கிராசாரியர் அயோக்ய: புருஷோ நாஸ்தி என்று யோக்யமில்லாத மனிதன் ஒருவனும் இல்லை என்ற அருத்தத்துடன் சொன்னார்.

"சமஷ்டி ஜீவனம் எப்படி நடக்கிறது."

"SOCIAL LIFE" MAINTAINED BY "SOCIAL SERVICE"

ஜனங்கள் செய்வதென்னவென்றால் அவரவர்கள் தங்கள் தங்கள் அத்தி, சக்தி, சமயம் இவைகளுக்குத் தக்கபடி என்னென்ன வேலை செய்யக்கூடுமோ அந்தந்த வேலைகள்செய்து, என்னென்ன பொருள்கள் ஜனங்களுக்குப் பிரயோசனமாகத்தக்க வைகளோ அவைகளை ஏராளமாகத் தங்களாலியன்ற மட்டும் உண்டாக்கி, தங்களுக்கு வேண்டியதுபோக மிகுதியை வியாபாரிகள் மூலமாகப் பிறருக்குச் சேர்ப்பிக்கிறார்கள். இப்படி ஒவ்வொரு மனிதனுக்கும் வேண்டிய பதார்த்தங்கள் வெவ்வேறு இடங்களில் உற்பத்தியாக்கப்பட்டு வெவ்வேறு கையேறி சமுத்திரம்பாயும் ஆறுகள்போல, பல இடங்களில் பரவி இவ்வுலகில் வாழும் பற்பல ஜனங்களின் சங்காதமாகிற மகாசமுத்திரத்தில் விழுந்து லயமடைகிறது ஒருநாள் உலகம் முழுதும் வேலை செய்யாவிடில் எப்படி உடனே சமஸ்தமானிட ஜீவமும் மடிந்து விடுமென்று எளிதில் விளங்கும். ஆகையால் நாமறியவேண்டியது என்னவெனில் உழைப்பு என்பதின்பேரில் தான் இந்த ஜகத்ஜீவனெல்லாம் சார்ந்திருக்கிறது. உழைப்பு இல்லாவிடில் பிழைப்பு இல்லை என்பது செல்வநூல் கற்பிக்கும் தத்துவங்களில் முதன்மையானது. ஆகவே எல்லாரும் உழைத்தே பிழைக்க வேண்டியது. எவன் உழைப்பில்லாமல் பிழைக்க வகைதேடுகிறானோ அவன் திருடனே யொழிய வேறில்லை. நாம் மற்ற ஜனங்களிடமிருந்து அவர் உழைப்பின் பலனை அடைகிறோம். நாமும் அவர்களுக்கு நம் உழைப்பின் பலனைக்கொடுக்கவே வேண்டும்.

[illegible]

## TO LIVE IN TOUCH WITH THE LAND IS TO 'LABOUR' INDEED!

## வேளாண்மையோ தாளாண்மையோ!

"உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு."—திருக்குறள்.

"உழுதுண்டு வாழ்வது" தானே வேளாண்மை என்னப்படும். இந்த வேளாண்மைக்கு ஒப்பான வேறு தொழில் இல்லை. ஏனெனில் இத்தொழிலில் பழுதொன்றும் இல்லை. மற்றோர் வேலையில் பழுதுண்டு.

"உழுதுண்டு வாழ்வான்" பிரகிருதிவித்தையிற் சிறந்தவனாக இருப்பான். இல்லாவிடில் அவன் தொழில்நடத்த சாத்தியப்படாது. பிரகிருதி வித்தையிற் சிறந்தவன் தாய்மடியில் விளையாடும் பிள்ளைபோல் யாதொருகுறையுமின்றி வாழ்வான் என்பது அநுபவசித்தாந்தம். ஏனெனில், "தன்குலை தாங்காக் காமில்லை" யென்பதுபோல் பிரகிருதியினுண்மை யுணர்ந்தவனுக்கு தரித்திரம் என்பது இல்லை. உலகமெல்லாம் அவன் வசமாயிருக்கும். இகத்திலுள்ள பாக்கியமெல்லாம் அவனுக்குண்டாவதோடு அவன் யோக்கியனாகவேயிருப்பானாதலால் பரத்திலுள்ள இன்பமும் அவனுக்குண்டு. எப்படியெனில் "பிரகிருதியினுண்மையில் பரமனைக்காணலாம்." பரமனைக்கண்டவனுக்கு இகபரசம்பத்துக்களெல்லாம் ஒருங்கேவந்தமையும். அன்றி வேளாண்மை முயற்சியின்றி நடவாது. எண்சாணுடம்புக்குச் சிரசே பிரதானம் என்பதுபோல, வேளாண்மைக்குத் தாளாண்மையே அத்தியந்தசாதகமும் சாதனமுமாகும். தாளாண்மை என்றால் என்னவரினும் ஏற்று ஈடு கொடுத்துச் சமாளிக்கும் சாமர்த்தியம். இதற்கே முயற்சி யென்றுபேர். இப்படிப்பட்ட "முயற்சி" தான் "திருவினை ஆக்கும்" என்றார் மேலோர். இங்கே யிஃதெல்லாம் சொல்லவந்தது வேளாளரின் தாளாண்மையைப்பற்றி அத்தொழில் பழகுவார் ஒருவர் கிருஷிகன் பத்திரிகையில் எழுதியுள்ளதைப்பார்த்து அதுவிஷயம் எழுத்துப்பிழைமலிந்திருந்தாலும் சொற்பிழைகள் பலவிருந்தாலும் பொருட்சுவை குன்றாது படிக்கமிக ரஸிகமாயிருப்பதையெடுத்துக் காட்டவேண்டுமென்றே யன்றி வேறல்ல. இனி அவருடைய வியாசத்தைப் பிழை திருத்திக் கீழே பிரசுரிப்போம்.

"ஒருவன் ஒரு காரியத்தில் முயற்சி செய்யும் காலத்து எவ்வித இடையூறினும் கைவிடாது செய்தலே முயற்சியாகும். முயற்சி அதாவது, தாளாண்மையாவது தடுக்கப்படாத ஆண்மை யாகும். முயற்சி தன்னாலேயே கைகூடும். விதிப்படி நடக்குமென்றெண்ணி யாதொரு காரியத்திலும் முயற்சி செய்யாமலிருக்கலே வறுமையடைவதற்கு முக்கியகாரணம். "தெய் வத்தாலாகா தெனினும்முயற்சிதன்மெய்வருத் தக்கூலிதரும்." "முயற்சி திருவினையாக்கும், முயற்றின்மை இன்மை தவிர்த்துவிடும்." சாத் தியப்படாத பொருளை அடைய முயல்கின்ற வன் மேன்மையுடையவனயினும் பெயர்களில் முந்தினவனைக்காணப்படுவான். யாதொருகாரி யத்தினிடத்தும் சோம்பலின்றி தக்க முயற்சி செய்பவனை வறுமை நெருங்குதற்கு அஞ்சும். சோம்பலுக்கு இடம்தராது முயற்சி செய்ய வேண்டும். மேலான விரதங்களை இடையூறி ன்றி நடத்த முயல்கின்றவன் வயதில் சிறியவ னுக இருக்கினும் தவசி எனப் பெயரெடுப் பான். பயிர் என்பது பயிர்ச்சி-முயற்சி என வும் கொள்ளப்படும். ஆதலால் பயிர் செய்வ தினல் இயற்றப்படும் முயற்சியே செல்வப்பெ ருக்குக்கு ஆஸ்பதமாம். உழவு முதலியவை களும் வருத்தமுற்று இட்ட பயிரின் பலனைக் கொடுக்கும் காலத்தில் சோம்பலால் நடத்த அறியாதவன் தரித்திரத்தை யடைவான். எல் லாக் காரியங்களுக்கும் அவைகளுடையும் பய னுக்கும் தெய்வகாரணத்தைப் பார்க்கிலும் புருஷப்பிரயத்தனம் மேலானதாகும். எப் படி யெனில் ஒற்றைத்தேருருளையால் ரதம் நடவாத தன்மைபோல் புருஷப்பிரயத்தனம் இல்லாமல் தெய்வசங்கல்பத்தினல் ஒன்றும் முடியாது. தெய்வசங்கல்பம் தானே புரு ஷப்பிரயத்தனத்தைக் கூட்டுவிக்கும்.

"எள்ளும் அதற்குள் எண்ணெயும் கடவு ளால் உண்டாக்கப்பட்டிருந்தாலும் புருஷப் பிரயத்தனமென்கிற முயற்சியில்லாமல் எண் ணெய் வெளிப்படுவதில்லை. ஆகலால் முய ற்சி யின்றி ஒன்றும் நிறைவேறாது. அதில் லாமல் சோம்பலுற்றவன் பயன்படான். முய ற்சி இல்லாவிடில் கல்வி இல்லை. கல்வி இல்லா விடில் புத்தியுமில்லை. பராக்கிரம மு மில் லை. இவைகளில்லாவிடில் பொருளும் இல்லை, பெருமையுமில்லை. சில சமயம் பொருள் மாத்திரம் இருந்தால் முயற்சி இல்லாவிடில் யாதொன்றும் கைகூடாது. முயற்சியுள்ள புருஷ சிம்மத்தையே மகாலட்சுமி அடைகி ருள். தெய்வத்தால் பொருள்பெற வேண்டு மென்று சோம்பலுற்றிருப்பவன் அவிவேகியும் அறியாமையுமுள்ளவனவன். புருஷப்பிரயத் தனத்தோடுகூடியபுத்திமான் பலவற்றிலும் சென்றுழல்கின்ற மனதை விவேகத்தால் தடு த்து நிலைநிற்கச்செய்வதே மோக்ஷத்துக்கு முக் கிய காரணமான முயற்சியாம். ஒருவன் தன் கஷ்டத்தைப் பாராமல் பிரயோஜனத்தைக் கொடுக்கும் தொழில் இன்னதென்று அறிந்து அதனிடத்து முயற்சிசெய்து நடப்பானுகில் செல்வமும் பெருமையும் ஏன் உண்டாகாமற் போகும். உண்டாவது சித்தம். எதைக் குறித்தும் சோம்பலின்றி முயற்சி செய்யாமல் தரித்திரத்தால் வருந்துவோன் கல்வியில் சிறந்தவனுக இருந்தாலும் உலகத்தால் பழிக் கப்படுவான். இவ்வித உலகப் பழிப்புக்கு அளாவதைவிட இறத்தலே நன்று. அல்லது பிறருக்குபகாரம் செய்ய முன்வந்தவனுக்கும் முயற்சியினுல் மனம் சேர்ராமலிருப்பவனுக் கும் பல நன்மையும் கைகூடும். முயற்சி இல் லாமல் பரோபகாரம் செய்யவேண்டுமென் கின்ற எண்ணத்தைமாத்திரம் கொண்டிருந் தால் அவ் வெண்ணம் முடிவுபெறாது. "தாளா ண்மை இல்லான் வேளாண்மை பேடிகை வாளாகக்கெடும்" என்று குறளாசிரியர் கூறி யுள்ளார். எல்லா உயிரையும் வதைப்பதற்குக் காரணமாகிய கூர்மையுள்ள வாளாயுதம் பேடி கையில் விளங்கிக்கொண்டிருந்தால் அதினல் யாதுபயன்? முயற்சியுடையார் இகழ்ச்சியடை யார். முயற்சியில் பல இடையூறுகள் வந்த போதிலும் தங்களுடைய தொழிலிலேயே கண்ணும் கருத்துமாய் இருப்பதோடு சிர மத்தை கவனியாது முயற்சிக்க வேண்டும்.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணுயி னர்."

என்று நூல்கள் கூறுகின்றன. இக்கால நாகரிகத்தைத் தழுவி பலர் புகழைவிரும்பி தத்தந் தொழிலையும் கைசோரவிடுகிறார்கள்."